29

# கொடை வீரன்

ஆசிரியர்

ச. கு. கணபதி ஐயர், M.A.



வீரர்-8

# கொடைவீரன் கன்னன்




ஆசிரியர் :
ச. கு. கணபதி ஐயர் எம்.ஏ.



கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் : சென்னை-4.

முதற் பதிப்பு: பிப்ரவரி, 1957
மறு பதிப்பு: மே, 1960
மறு பதிப்பு: ஆகஸ்ட், 1961
மறு பதிப்பு: செப்டம்பர், 1965

86106.
6985

உரிமை பதிவு
விலை 0-62 பைசா

Approved by the T.B.C. Madras.
for class use for standard V. Vide Page 16-
Fort St. George Gazette, Part I B, dated 18-5-60.

Paper used : D/C White Printing 11 kgms.



Printed at Sri Pandaari Press, Madras-1.

# முகவுரை

கதை கேட்பதில் பிள்ளைகளுக்கே அன்றி வயது முதிர்ந் தவர்களுக்கும் ஆர்வம் அதிகம். நம் இதிகாசக் கதைகள் என்ருல் அவற்றை எத்தனை முறை கேட்டாலும் கேட்பவர் களுக்குச் சலிப்பு ஏற்படுவதே இல்லை. பாரத வீரர்கள் என்னும் வரிசை இளம் மனத்துக்குப் பண்பையும், ஓர் இலட்சியத்தையும் தரக்கூடியவாறு புதிய பாணியில் எழுதப் பெற்றது.

பாரத வீரர் வரிசையில் கொடைவீரன் கன்னன் உயர் குடிப் பிறப்பை உடையவன்; நூற்றைவரும் போற்ற மேலான பதவியில் இருக்கத்தக்கவன். அப்படிக் கிடைக்க இருந்த பதவியை ஒரு கணத்தில் அவன் உதறித்தள்ளி ஞன். அத்தகையவனை இழிகுலத்தவன் என்று உலகம் தூற்றுகிறது. அவனைச் சூழ்ந்துள்ள பெரியார் யாவரும் அவனை இழிவாகப் பேசுகிருர்கள். தன் இனம் பொல்லா தது என்பதை அவனே உணர்கிருன். உணர்ந்தும் அதனை விட்டு நீங்குவது அறம் அன்று என்று கருதுகிருன். உயி ருடன் இருக்கும்போது புகழை விரும்பவில்லை கன்னன். தன் பிறப்பைத் தன் ஆயுள் காலத்தில் வெளியிடவேண் டாம் என்று தாயை வேண்டிக்கொள்கிருன். குருவை அவன் வஞ்சிக்கவில்லை; அவருடைய சாபத்தை மகிழ்ச்சி யோடு ஏற்றுக்கொள்கிருன். தருமம் தன்னைச் செய்கிறவனை எப்படி எல்லாம் காப்பாற்றுகிறது என்பதற்குக் கன்ன னுடைய சரித்திரம் ஓர் எடுத்துக்காட்டு. பீஷ்மர் விஷயத் தில் அவன் பெரிய தவறிழைத்தவனே. ஆயினும் இறுதி யில் அவன் அதை அறிந்து, பரிகாரம் தேடுகிருன். அம்புப் படுக்கையில் பீஷ்மரைக் கண்டு வணங்கி, அவருடைய மன்னிப்பைப் பெறுகிருன். நன்றியறிதல், எவராலும் அசைக்கமுடியாத நட்பு, ஆணித்தரமான கொடை, அஞ்சாமல் எதிர்நின்று போராடும் உள்ளம் இத்தனையும் இளம் உள்ளங்களுக்குச் சிறந்த பாடங்களாகும்.


MADURAI UNIVERSITY LIBRARY
MADURAI-2

# பொருளடக்கம்

# கொடைவீரன் கன்னன்

MADURAI UNIVERSITY LIBRARY
MADURAI-2.

## 1. தெய்வப் பிறவி

பாரத தேசத்தில் பழங்காலத்தில் பல இராஜ்ஜி யங்கள் இருந்தன. அவற்றுள் போசலம் என்பது ஒன்று. அதன் அரசன் ஒருவனைக் காணத் துர்வா சர் என்பவர் வந்தார். அரசனுடைய அரண்மனை யில் அவர் சில நாள் தங்கினுர். அவருடன் இருந்து அவருக்கு வேண்டியவற்றைக் கவனித்துவர அரசன் பத்து வயதுள்ள தன் மகளை ஏற்பாடு செய் தான். அவள் பெயர் குந்தி.

துர்வாசர் கடுங்கோபக்காரரர். அவருடன் பழகு வது கஷ்டம். செய்யும் வேலையில் சிறிது பிழை ஏற்பட்டால்கூடப் பிழை செய்தவரை முனிவர் சபித்து விடுவார். அத்தகைய முனிவர், மனம் மகிழும்படி குந்தி அவருக்கு ஏழு நாள் பணிவிடை புரிந்தாள்.

துர்வாசர் அவளுடைய பொறுமையையும் புத்தி நுட்பத்தையும் குறிப்பறிந்து ஏவல் செய்யும் இயல்பையும் கண்டு, “சிறுமியே! நான் உனக்கு ஆறு மந்திரங்களை உபதேசிக்கிறேன். இந்த மந்தி ரங்களில் ஒன்றை உச்சரித்து, மகா புருஷன் ஒரு வனை நினைத்தால் அவன் நேரே உன்னிடம் வந்து, உனக்கு அழகிய பாலகன் ஒருவனை அளிப்பான்” என்று சொல்லி, ஆறு மந்திரங்களையும் அவளுக்கு உபதேசித்துச் சென்றுர்.

UNIVERSITY LIB

இளஞ் சிறுமியாகிய குந்தி, முனிவர் உபதேசித்த மந்திரம் பலிக்கிறதா என்று சோதனை செய்து பார்க்க ஆவல் கொண்டாள். எவரும் அறியாமல் கன்னிமாடத்தில் இருந்தபடியே சூரியனை நினைத்து, ஒரு மந்திரத்தை ஜபித்தாள். உடனே சூரியன் தன் வெப்பத்தை மாற்றிக்கொண்டு, அவளை அணுகினான். ஓர் ஆண் குழந்தையைக் கொடுத்து விட்டுச் சென்றான்.

குழந்தை, கண்டோர் ஆர்வம் கொள்ளத்தக்க அழகுடையதாக விளங்கிற்று. ஒளி வீசின அதன் காதுகளில் இரண்டு குண்டலங்கள் மின்னின. மார்பில் உறுதியான கவசம் ஒன்று காணப்பட்டது. குழந்தை இவ்வளவு சிறப்புக்களுடன் பிறந்தும் குந்தி, 'மணமாகாத பெண், குழந்தை பெற்றாள்!' என்ற பழி தனக்கு வருமே என்று அஞ்சினாள். போசலன் குழந்தையைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தான். ஆயினும் தன் குலத்துக்குப் பழிவரக் கூடாது என்று எண்ணி, அந்தக் குழந்தையை ஒரு பெட்டியில் வைத்து, ஆற்றில் விட்டு விட்டான். முழுகிப் போகாமலும் அதிலுள்ள குழந்தை, சில நாள்வரை உயிருடன் இருக்கும்படியும் வேலைத் திறமை வாய்ந்த நிபுணர்களால் தயார் செய்யப் பட்ட பெட்டி அது.

அருமையாகக் கிடைத்த மேலான குழந்தையை இழந்தோமே என்று குந்தி கலங்கினாள். நீண்ட நாள் வரை அந்த வருத்தம் தீரவில்லை.

அஸ்தினாபுரத்தில் திருதராஷ்டிர மன்னனுக்குத் தேர் செலுத்தும் சாரதி ஒருவன் இருந்தான்.

அந்தத் தேர்ப்பாகனுக்கு நெடுங்காலமாகப் பிள்ளை கள் இல்லை. அவனும் அவன் மனைவியும் தங்களுக்கு ஒரு பிள்ளை வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்து வந்தனர். இறைவன் அவர்களுடைய வேண்டுகோளுக்குச் செவி சாய்த்தார்.



ஒரு நாள் ஆற்றில் அவன் குளித்துக்கொண் டிருக்கையில் பெட்டி ஒன்று மிதந்து வருவதைக் கண்ணுற்றான். கரை ஓரமாக அவன் இருந்த இடத்திற்குப் பெட்டி ஒதுங்கி வந்தது. அவன் ஜாக்கிரதையாக அதனை வீட்டுக்கு எடுத்துச் சென் றான். தானும் மனைவியுமாக அதைத் திறந்து பார்த்தார்கள். கோடி சூரியப் பிரகாசமாக ஒரு குழந்தை அதில் விளையாடிக்கொண் டிருந்தது.

தங்களுடைய பிரார்த்தனைக்கு இரங்கித் தெய்வம் அந்தக் குழந்தையைக் கொடுத்ததாகச் சாரதியும் அவனுடைய மனைவியும் ஆனந்தம் கொண்டார்



கள். குழந்தையின் காதுகளில் குண்டலங்கள் இருந்ததால் அதற்கு அவர்கள் கர்ணன் (காதுகளில் விசேஷமுள்ளவன்) என்று பெயரிட்டு அழைத்தார்கள். கர்ணன் என்ற சொல் தமிழில் கன்னனென்று வழங்கும்.

கன்னன் மிகச் செல்வமாக வளர்பிறையைப் போல் சாரதியின் வீட்டில் வளர்ந்து வந்தான். குழந்தையின் அழகையும் முகத் தெளிவையும் கண்டவர்கள், 'தேர்ப் பாகன் அதிர்ஷ்டமுள்ளவன். எவளோ பெற்று, வேண்டாம் என்று ஒழித்துக் கட்டிய குழந்தையாயினும் அது சூரிய பிம்பம்போல் விளங்குகிறது. அதனை வளர்க்கும் பாக்கியம் நமக்குக் கிடைக்காமல் தேர்ப்பாகனுக்கல்லவா கிடைத்திருக்கிறது?' என்று பேசிக்கொண்டார்கள்.

சிறு வயதில் கன்னன் செய்த அரிய செயலைக் கண்டோர் வியப்புற்றனர். தான் கையில் வைத்திருக்கும் தின்பண்டத்தை அயலானுக்குக் கொடுத்துவிடுவான். தான் அணிந்திருந்த அணிகளைத் தானம் செய்துவிடுவான். செல்வச் சிறுவனாக இருந்ததால் கன்னனைத் தேர்ப்பாகனாகிய

வளர்ப்புத் தந்தை கோபித்துக் கொள்வதில்லை. அவன் காதுகளிலிருந்த குண்டலங்கள் கழற்ற முடியாதவை. அதனால் அவற்றை மட்டும் அவன் எவருக்கும் தானம் செய்ய முடியாமல் போயிற்று. இந்தக் கொடைக் குணத்தோடு கன்னனிடம் வீரமும் நட்பும் பிறர்பால் அருளும் எப்பொழுதும் உண்மையே பேசும் இயல்பும் இருந்தன.

இவனைக் கண்ட சோதிடர்கள், 'பிற்காலத்தில் இவன் சிறந்த வில் வீரனாக விளங்குவான்; தேவர்களும் கையேந்தி யாசிக்கக்கூடிய பாக்கியத்தை இவன் செய்திருக்கிறதனால் இவன் பெரிய வள்ளலாக விளங்குவான்' என்று சொன்னார்கள்.

கன்னனைச் சிறந்த வில் வீரன் ஆக்கத் தந்தைக்கு ஆர்வம் இருந்தது. ஆயினும் தக்க ஆசிரியர் கிடைக்கவில்லை. அரச மரபினருக்கும் அந்தணர்களுக்கும் அல்லாமல் வேறு குலத்தவர்களுக்கு வில்வித்தை சொல்லிக் கொடுத்தவர்கள் அக்காலத்தில் இல்லை. பையனை என்ன செய்வது என்று சாரதி கவலைப்பட்டு வந்தார்.

# 2. கல்விப் பேறு

கன்னன் தன் வளர்ப்புத் தந்தையின் கவலையை அறிந்துகொண்டான். "தந்தையே! என்பொருட்டு வருந்தவேண்டாம். நான் ஒரு நல்லாசிரியரைத் தேடிக் கண்டு, அவரிடம் வில்வித்தை பயின்று வருகிறேன்" என்று சொல்லி விடைபெற்றுச் சென்ருன்.

பல நாள் ஆசிரியரைத் தேடி அலேந்து திரிந்தான். பல நாள் ஆகியும் எவரும் கிடைக்காத சோர்விஞல் ஒரு சோலேயில் பொய்கைக் கரை அருகில் படுத்துத் தூங்கிவிட்டான். அந்தச் சமயத்தில் அங்கே முனிவர் ஒருவர் வந்தார். வந்தவர் கன்னனுடைய முகவிலாசத்தைக் கண்டு, "ஹா ஹா! இவன் எவ்வளவு ஒளியோடு விளங்குகிருன்! இருந்த போதிலும் இவன் முகத்தில் கவலேயும் சோர்வும் காணப்படுகின்றன. தெய்வப் பிறவியை உடையவன் போலும்! இவன் யாவனே அறிவோம்" என்று நினேத்து, அவனே எழுப்பினுர்.

எழுப்ப எழுந்த கன்னன், முனிவரைக் கண்டு சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு அவர்முன் நின்ருன்.

"மைந்தா! சூரியனேப்போல் விளங்கும் உன்னேப் பெறும் பாக்கியம் செய்தவர்கள் யார்?" என்ருர் முனிவர்.

"தந்தையே, என் பிறப்பை நான் அறியேன்; அதனேத் தெரிந்தவரையும் காண்கிலேன். என்

பெயர் கன்னன். நான் அஸ்தினபுரியில் திருதராஷ் டிரருக்குத் தேரைச் செலுத்தும் சாரதி ஒருவன் வளர்ப்பில் வளர்ந்தவன். நான் அறிவது இவ்வ ளவே!'' என்றான்.

அஸ்தினபுரம் என்று கன்னன் கூறியதும் முனிவர் முகம் சுருங்கியது. பீஷ்மரின் நினைவு தோன்றிற்று. பீஷ்மர் தம்மிடத்தில் கற்ற வித்தை யைக் கொண்டு, தம் சொல்லைக் கேளாமல், தம் மையே முறியடித்து அனுப்பியதை அவர் எண்ணி னார். 'எந்த அரசனுக்கும் இனிமேல் நான் வில் வித்தையைக் கற்றுக் கொடுப்பதில்லை!' என்று அன்று தாம் செய்துகொண்ட சபதத்தை நினைத் துக்கொண்டார். அந்த முனிவரே பரசுராமர். அவர் வில்வித்தையில் மிகப் புகழ்பெற்றவர்.

பரசுராமர் கன்னனை நோக்கி, ''குழந்தாய்! நீ ஏன் கவலையில் ஆழ்ந்திருக்கிறாய்? உள்ளத்தில் இருப்பதை உன் முகம் கள்ளமின்றிக் காட்டுகின் றதே!'' என்றார்.

தனக்கு வில்வித்தை கற்றுக்கொள்வதில் இருக் கும் ஆர்வத்தைக் கன்னன் தெரிவித்தான்.

'எந்த அரச மரபினருடைய இரத்த சம்பந்த மும் இவனிடம் இருப்பதாகத் தெரியவில்லை. அஸ் திரவித்தை கற்றுக்கொள்ள இவன் மிக்க ஆர்வ முடையவனாக இருக்கிறான். என் மனம் இவனைக் கண்டதும் இவன்பால் லயித்துவிட்டது. இவன் உத்தம சீடனாக இருப்பான் என்பதில் ஐயமில்லை. இந்தக் காரணங்களால் இவனுக்கு நான் வித்தை

யைக் கற்பித்து, இவனது மனோபீஷ்டத்தை முடிக்கிறேன்' என்று பரசுராமர் உறுதிகொண்டார்.

பிறகு அவர் கன்னனைத் தடவிக் கொடுத்து, "குழந்தாய்! உன் பிறப்பைப்பற்றிய கவலை உனக்கு வேண்டாம். குலம் கோத்திரம் தெரியாதவனுக்கு ஒரு குரு தன் கோத்திரத்தைக் கொடுக்கலாம். இன்று முதல் நீ என்னிடம் இருந்து கல்வி பயில்வாயாக! என்னைப் பரசுராமன் என்பார்கள்" என்று முனிவர் கூறினார். அவனுக்கு உபநயனம் செய்து, வேதங்களைக் கற்பித்து முறையாக அஸ்திரப் பயிற்சியையும் அளிக்கத் தொடங்கினார்.

பரசுராமரின் தொடர்பால் கன்னன் மேன்மேல் ஒளி பெற்று, சாணை பிடித்த மணிபோல் விளங்கலானான்.

## 3. சாபம் பெறுதல்

ஒரு நாள் பரசுராமர் கன்னன் மடிமீது தலையை வைத்துக்கொண்டு தூங்கினர். கன்னனுடைய கைகள் அவருடைய முதுகின் அடியில் அவர் தூங்குவதற்கு வசதியாக இருந்தன. அந்தச் சமயத்தில் காட்டுக்குளவி ஒன்று அங்கே வந்தது. அது கன்னனுடைய துடையைக் குடையத் தொடங்கியது. கைகளை எடுத்து, அதனை ஓட்டலாம் என்ருல், குரு விழித்துக்கொள்வார். அவர் தூக்கத்துக்குப் பங்கம் ஏற்பட்டுவிடும். இதனை எண்ணிக் கன்னன் அசையாமல் குளவியின் தொந்தரவைப் பல்லைக் கடித்துக்கொண்டு பொறுத்து வந்தான். இரத்தம் துடையிலிருந்து பீரிட்டுப் பெருகியது. சில துளிகள் பரசுராமர் கன்னத்தில் பட்டன. புது இரத்தத்தின் சூட்டினுல் அவர் விழித்துக்கொண்டார். அவ்வளவில் குளவி பறந்து சென்றுவிட்டது. எழுந்தவர் கன்னனுடைய நிலையை நோக்கினர். தன் கன்னத்திலுள்ள இரத்தத்தைத் துடைத்துக்கொண்டு, "கன்ன! என்ன கோலம் இது! உன் துடையிலிருந்து குருதி பெருகுவதற்குக் காரணம் யாது?" என்ருர்.

கன்னன் காரணத்தைச் சொன்னுன்.

அதைக் கேட்ட பரசுராமர் ஓரடி அப்பால் நகர்ந்து சென்று, "கன்ன, நீ அரச மரபினன்!" என்ருர்.

அவருடைய குரலிலிருந்து அவர் கலவரப்பட்டுள்ளார் என்று கன்னன் எண்ணினான். "நான் அரச மரபினன் ஆனால் என்ன? தாங்கள் கலவரம் அடைவானேன், தந்தையே!" என்றான்.

"நான் அரச மரபினர்களுக்கு வில் வித்தை கற்றுக் கொடுப்பதில்லை என்று சபதம் செய்துள்ளேன்" என்று சொல்லி அவர், பீஷ்மருக்கும் தமக்கும் ஏற்பட்ட மனஸ்தாப வரலாற்றைக் கூறினார்.

பீஷ்மர் பரசுராமரிடம் கல்வி பயின்றவர். இந்தப் பிறவியில் மணஞ் செய்துகொள்வதில்லையென்று தம் தந்தையின் பொருட்டுச் சபதம் செய்திருந்தார், பீஷ்மர். இந்தச் சபதத்துக்குப் பிறகு ஒரு நாள் பரசுராமர் ஒரு பெண்ணை அழைத்துக் கொண்டு பீஷ்மரிடம் வந்து, "அப்பா, நீ இவளை மணந்துகொள்" என்றார். பீஷ்மர் தம் சபதத்தைப் பற்றிப் பரசுராமருக்கு எடுத்துச் சொல்லி, எந்தப் பெண்ணையும் தாம் மணக்க முடியாது என்றார். பரசுராமர் வற்புறுத்தியும் பீஷ்மர் தம் உறுதியை இழக்கவில்லை. பிறகு பரசுராமர் பீஷ்மரைப் போருக்கு அழைத்தார்; அந்தப் போரில் பரசுராமர் தோல்வியுற்றுத் தம் இருப்பிடம் திரும்பினார். "பீஷ்மன் அரச மரபினன் ஆதல் பற்றி, என் சொல்லை நிராகரித்தான். இனி அரச மரபினன் யாருக்கும் நான் கல்வி புகட்டுவதில்லை" என்று அவர் சபதம் செய்துகொண்டார்.

இந்த வரலாற்றைப் பரசுராமர் சொல்லக் கன்னன் கேட்டான். "தந்தையே! நான் அரச மரபினனாயின் தங்கள் சபதத்துக்குக் குறைவு வந்து



விட்டதே! நான் அரச மரபினன் என்பதை எவ்வாறு அறிந்துகொண்டீர்கள்?'' என்ருன் அவன்.

''இரத்தம் ஆருகப் பெருகும்படி ஏற்படும் காயத்தின் வலியைப் பொறுத்துக்கொள்ளும் திறமை அரச மரபினனுக்கே உண்டு. மற்றவர்களால் அது சாத்தியமில்லை. நிச்சயமாக நீ அரச மரபினனுகத் தான் இருக்க வேண்டும். நீயாக என்னை ஏமாற்ற வில்லை. நான்தான் ஏமாந்தேன்'' என்ருர் பரசுராமர்.

''ஏமாந்ததுதானே! வேண்டுமென்று செய்ய வில்லையே! இதற்குப் பரிகாரம் இல்லையா?'' என்ருன் கன்னன்.

''என்னிடம் நீ கற்றுக்கொண்டிருக்கும் வித்தை உனக்குத் தக்க சமயத்திற் பலியாமல் போகக் கடவது என்று சபிப்பதுதான் இதற்குப் பரிகாரம். பிழை செய்யாத உன்னைச் சபிப்பது அழகன்று; சபியாமல் இருந்தாலோ என் விரதம் கெடுகிறது. இருதலைக்

கொள்ளியின்மேல் எறும்பானேன் நான்!" என்று கண்களில் நீர் பெருகப் பரசுராமர் கூறினர்.

"என்னை நீங்கள் தாராளமாகச் சபியுங்கள்! உங்கள் சபதத்தைக் காப்பது சீடனுகிய எனக்கும் கடமைதானே!" என்று சொல்லிக் கன்னன் அவர் திருவடிகளில் வீழ்ந்து, கைகட்டி வாய்புதைத்து நின்ருன்.

"மைந்தா! உன்னைச் சபிக்கிறேன். வித்தையைத் தக்க சமயத்தில் நீ மறந்துவிடுவதனுல் உனக்குத் தீமை வராது. உன் கவச குண்டலங்கள் உன்னைப் பகைவரிடம் இருந்து காப்பாற்றும். உன் அறச் செயல்கள் உனக்கு ஆபத்துக் காலத்தில் சிறந்த காவலாகத் துணை செய்யும்" என்று பரசுராமர் கூறினர்.

கன்னன் சாபத்தை ஏற்றுக்கொண்டான். அவன் முகம் மலர்ந்தது! குருவின் பொருட்டு எதனையும் தாங்குகின்றவன் அவன்.

"கன்ன! நீ இழிகுலத்தவன் என்ற கவலை ஒழிந்தது. உன் பெயர் உலகம் உள்ள அளவும் நிற்கும். நீ அரச மரபினன் என்ற விஷயத்தை மட்டும் எவருக்கும் சொல்லவேண்டாம். உண்மை தானுக வெளிப்படும். இப்போது உன்னை நிந்திக்கும் உலகம் அப்போது பன்மடங்கு புகழும். அரச மரபினனுக்கு இந்த ஆச்சிரமத்தில் வேலை இல்லை. நீ சென்று வருக" என்று அன்பு மொழியினைக் கூறி, அவனை ஆசீர்வதித்து அனுப்பினர் பரசுராமர்.

குருவைப் பிரிய நேர்ந்ததே என்ற ஒரு வருத்தம் தவிர வேறு வருத்தமின்றிக் கன்னன் அஸ்தினபுரியை அடைந்தான்.

## 4. பட்டமும் பதவியும்

அஸ்தினபுரி அரசனான திருதராஷ்டிரனுக்கு நூறு பிள்ளைகள் இருந்தனர். இவர்களுள் மூத்தவன் பெயர் துரியோதனன். மானமே உயிரினும் பெரிது என்று மதிப்பவன். திருதராஷ்டிரனுக்குப் பாண்டு என்று ஒரு தம்பி இருந்தான். இளம் வயதில் கன்னனை ஈன்ற குந்தி தேவியைப் பாண்டு மணந்துகொண்டான். குந்தி, துருவாசரிடம் கற்றுக் கொண்ட வேறு மந்திரங்களால், தருமன், பீமன், அர்ஜுனன், நகுலன், சகாதேவன் என்று ஐந்து மைந்தர்கள் அவளுடைய கல்யாணத்தின் பின் தோன்றினர். இவர்கள் பாண்டவர்கள் எனப்படுவார்கள். பாண்டு, இறந்து போகவே பாண்டவர்கள் குந்தியுடன் அஸ்தினபுரியில் வாழ்ந்து வந்தார்கள்.

திருதராஷ்டிரன் பிறவிக் குருடன். அதனால் இராஜ்ஜிய காரியங்களை அவனுடைய பெரிய தகப்பனாராகிய பீஷ்மர் கவனித்து வந்தார். துரியோதனன் செல்லப்பிள்ளை. பெரியவனான பிறகு அவன் இராஜ்ஜிய காரியங்களில் குறுக்கிட்டுத் தன் தகப்பனைத் தன் இஷ்டம்போல் நடக்கச் செய்தான்.

பாண்டவரும் துரியோதனன் முதலிய நூறு பேரும் துரோணர் என்ற சிறந்த வில்லாசிரியரிடம் கல்வி பயின்று வந்தார்கள். கல்வியில், பாண்டவர்கள் சிறந்தவராயினர். அதனால் அவர்கள்மேல் துரியோதனன் பொறாமை கொண்டான்.

கல்வியின் முடிவில் ஒரு நாள் துரோணர் சபை கூட்டினார். அந்தச் சபையின் முன் மாணவர், ஒவ்

வொருவராகத் தங்கள் திறமையைக் காட்டினார்கள்.

அப்பொழுது பீமன் தன்னைப்போல் மல்யுத்தம் செய்கின்றவர்கள் உலகில் இல்லை என்று வீரம் பேசினான். அதனைக் கேட்ட துரியோதனன் அவனை மல்யுத்தத்திற்கு அழைத்தான். விளையாட்டுச் சண்டை விபரீதமாக முடியும்போல் இருந்தது அதனால் சிலர் இடையில் குறுக்கிட்டு இருவரையும் சாமாதானம் செய்து, போரை விலக்கினார்கள்.

பிறகு அர்ஜுனன் வில்லைக் கொண்டு, பல வித்தைகளைக் காட்டினான். 'இந்த மாதிரி இந்த உலகில் எவராலும் செய்ய முடியாது. திறமையுள்ளவர் ஒருகை பார்க்கலாம்!' என்று அர்ஜுனன் அப்போது சொன்னான்.

துரியோதனன் இதனைக் கேட்டான். தன் கட்சியில் அர்ஜுனனுக்குச் சமமாக எவரும் அச்சமயம் இல்லையே என்று அவன் வருந்தினான்.

தொலைவில் ஒருபுறம் நின்றுகொண்டு, கன்னன் இவ்வளவையும் கவனித்து வந்தான். உலகில் தனக்குச் சமானமான வில்லாள் எவரும் இல்லை என்று அர்ஜுனன் கூறியது அவனுக்குப் பொறுக்கவில்லை. தேர்ப்பாகன் மகன் என்று உலகம் தன்னைச் சொல்லும்போது அரச குமாரனாகிய அர்ஜுனன் முன் போய், அவன் கர்வத்தை அடக்குவது எப்படி என்று கன்னன் யோசித்தான். துரியோதனன் வருந்துவது அப்பொழுது அவனுக்குத் தெரிந்தது. வில்வித்தை விஷயமாகத் துரியோதனனை மகிழ்விக்கத் தக்க சமயம் அது என்று அவன் கருதினான். அர்ஜுனனது அகங்காரத்தை அடக்கும் திறமை தன்னிடம் இருக்கிறது என்பதை அவன்

ஒருவர் மூலம் துரியோதனனுக்குச் சொல்லியனுப் பினுன்.

"தேர்ப்பாகன் மகனுக்கு என்ன தெரியப் போகிறது! இருந்தாலும் அவனை அழைத்து வாருங் கள் விசாரிக்கலாம்" என்ருன் துரியோதனன்.

கன்னனும் துரியோதனனும் சந்தித்தார்கள். கன்னனுடைய அழகிலும் பேச்சிலும் துரியோத னன் சொக்கிப் போனுன். தான் பரசுராமரிடம் வில்வித்தையை முற்றக் கற்றிருப்பதைக் கன்னன் கூறினுன். தான் அர்ஜுனனை வெல்ல முடியும் என்று துரியோதனன் நம்பும்படி சொன்னுன்.

"அப்படியானுல், நானே இருக்கிறேன். நீ அஞ்ச வேண்டாம். தைரியமாகச் சபை நடுவில் போய், அர்ஜுனனைப் போருக்கு அழை" என்ருன் துரியோதனன்.

கன்னன், சபை நடுவில் சென்று நின்ருன். அவனை முன்பின் அறியாதவர்கள் அவன் முகப் பொலிவையும் கம்பீரத்தையும் கண்டு, 'இந்த உத்தம வீரன் யாவனே!' என்று பேசிக்கொண் டார்கள். அவனை அறிந்தவர்கள், 'சிவபூசை நடுவில் கரடி புகுந்ததுபோல் அரசிளங் குமரர், தங்கள் வித்தையைக் காட்டும் இடத்தில் தேர்ப் பாகன் மகனுக்கு என்ன வேலை! இவன் இங்கு வந்ததற்குத் துரியோதனன் வர்க்கத்தாரின் சூழ்ச்சி ஏதேனும் காரணமாக இருத்தல் கூடும்' என்று பேசிக்கொண்டார்கள்.

இந்தச் சமயத்தில் கன்னன், அர்ஜுனனைப் பார்த்து, "அர்ஜுனு! வீண் பேச்சுப் பேசுவதில் பயனில்லை. எங்கே என்னேடு சற்றே போருக்கு

வா பார்க்கலாம்! உன் தலையை அறுத்தெறிந்து வெற்றிக் கடவுளை வணங்குகிறேன்!'' என்றான்.

இதனைக் கேட்டதும், "சபையிலிருந்த துரோணர், கிருபாசாரியார், பீஷ்மர் முதலிய பெரியவர்களுக்குக் கோபம் வந்துவிட்டது. தேர்ப்பாகன் மகன் அரச குமாரனை இழிவாகப் பேசுவதை நாம் பார்த்திருப்பதா! இழி குலத்தவனாகிய இவனைத் தள்ளுங்கள் வெளியே!'' என்றார்கள்.

உடனே துரியோதனன் கன்னனுக்குச் சகாயமாக நடுவே வந்தான். "கற்றவர்களுக்கு ஜாதி இல்லை. 'எக்குடிப் பிறந்தோர் யாவரே ஆயினும் அக்குடியிற் கற்றோரை மேல்வரு கென்பர்' என்று நீதி நூல்கள் சாற்றுகின்றன. தனக்கு ஈடு உலகில் ஒருவரும் இல்லை என்ற சொல்லை உண்மை வீரன் எவனும் பொறுக்க மாட்டான். அந்த ரோசமே கன்னனை இங்கே கொண்டுவந்திருக்கிறது. இவன் மேல் பிழையில்லை!'' என்று கர்ஜித்தான் துரியோதனன்.

"இது துரோணருடைய மாணவர்களுள் ஏற்படுத்தப் பெற்ற சோதனை. இங்கே கன்னனுக்கு வேலை இல்லை'' என்று பெரியவர்கள் துரியோதனனுடைய ஆத்திரத்தை அடக்கினார்கள்.

இந்த விதமாக நூற்றைவரின் கல்விப் பரிசோதனை அன்று முடிந்தது.

'இனிக் கன்னனை இழிகுலத்தவன் என்று சொல்லுகிறவர் நாக்கைத் துண்டித்துவிடுகிறேன். அரசர் கூட்டத்தில் அவர்களுக்கும் மேலாக என்னுடன் அவனை வீற்றிருக்கச் செய்கிறேன்!' என்று உறுதி கொண்டான் துரியோதனன்.

தன் தந்தையிடம் சிபார்சு செய்து, கன்னனை அங்க தேசத்துக்கு அரசனாக்கினான். தானே அவன் தலையில் கிரீடம் வைத்துப் பட்டாபிஷேகம் செய்தான். தன் எச்சிலையே உண்ணாத பெருந் தன்மை வாய்ந்த மானியாகிய துரியோதனன், கன்னனோடு ஓர் இலையில் உண்டான். தன் தம்பி மாரை அழைத்து, "இனி நீங்கள் கன்னனை உங்கள் தமையனாகப் பாவித்து, வணங்கிப் போற்றி, அவனுக்குரிய மரியாதைகளைச் செய்ய வேண்டும்" என்று ஏற்பாடு செய்தான். அந்நாள் முதல், துரியோதனன் சபையில் கன்னன் சூரியன்போல் விளங்கினான்.

# 5. நட்பின் முதிர்ச்சி

நுனியிலிருந்து கரும்பைத் தின்னத் தின்னச் சுவை மிகுவது போலும், வளர்பிறையைப் போலும் கன்னனுக்கும் துரியோதனனுக்கும் நட்பு முதிர்ந்து வந்தது.

துரியோதனனுடைய அரண்மனையில் கன்னனுக்குச் சகல உரிமைகளும் இருந்தன. அவனுடைய தூய ஒழுக்கத்தை அறிந்து, துரியோதனன் அவன் தன் குடும்பத்தினரோடு நெருங்கிப் பழகுவதையும் ஆதரித்தான்.

ஒரு நாள் துரியோதனன் வெளியே சென்றிருந்தான். அவன் வரும் வரையிலும் கன்னனும் துரியோதனன் மனைவியும் சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்தனர். ஆட்டத்தில் துரியோதனன் மனைவி தோற்று வரலானாள். அந்தச் சமயத்தில் துரியோதனன் அங்கே வந்தான். கன்னன் அவன் வரவைக் கவனிக்கவில்லை. தன் கணவனை வரவேற்க அவள் சட்டென்று எழுந்தாள். தோற்றுவிட்டதால் அவள் எழுவதாகக் கன்னன் எண்ணி, "பூரா ஆட்டமும் முடியட்டும்; அதற்குள் எழக்கூடாது!" என்று சொல்லி, அவளுடைய முன்தானையைப் பற்றி இழுத்தான். அவள் மணிகளை எட்டு வடங்களாகக் கோத்து இடுப்பில் அணிந்திருந்தாள். அந்த அணி, மணிமேகலை எனப்படும். கன்னன் முன்தானையை இழுத்த வேகத்தில் வடம் அறுந்து, மணிகள் நாற்புறமும் சிந்தின. அதே சமயத்தில் கன்னன் துரியோதனன் வந்தி

ருப்பதை உணர்ந்தான். 'மகாராணியின் ஓர் ஆபரணம் குலேயச் செய்தது பெரிய குற்றமாயிற்றே' என்று கன்னன் அஞ்சினுன்.

துரியோதனன் இவ்வளவையும் பார்த்திருந்தான். அவன் கன்னனேக் கோபித்துக்கொள்ளவில்லே. தன் மனேவியை நோக்கி, "நீ பாதி ஆட்டத்தில் எழுந்தது உன் பிழை" என்று சொல்லிவிட்டு, "நண்பனே! இந்த மணிகளே நம்மில் ஒருவர் பொறுக்க மற்றெருவர் கோக்கலாமே! இந்த இரண்டில் நான் எதைச் செய்யட்டும்?" என்று கேட்டான்.



'நான் செய்தது பொறுத்தற்கு அரிய தவறு! என் ஆருயிர் நண்பன் துரியோதனன் இதனைப் பொறுத்ததோடு அமையாமல், "மணிகளைப் பொறுக்கவோ கோக்கவோ?" என்கிறான். இதனி லும் சிறந்த நட்பு யாது?' என்று கன்னன் கருதி னான். தன் ஆயுள் முழுவதும் துரியோதனனுக்குச் சேவை செய்து வருவதே தன் கடமை; அதுவே அறம் என்று அப்பொழுது அவன் உறுதி கொண் டான்.



# 6. ஈதலே என் கடன்

ஒரு நாள் சில பெரியோர்கள் துரியோதன னிடம் வந்தார்கள். “ நாங்கள் பெரிய யாகம் ஒன்று செய்கிறோம் ; அதற்கு விறகு மிகுதியாகவேண்டும். இது மழைக்காலம் ஆதலால் உலர்ந்த விறகு எங்கும் கிடைக்க வில்லை. தயை செய்து நூறு வண்டி விறகு அனுப்ப வேண்டும் ” என்று கேட்டுக்கொண்டனர்.

“ துரியோதனன் பல இடங்களில் விசாரித் தான். எங்கும் அவ்வளவு விறகு கிடைக்காது என்று எல்லோரும் சொல்லிவிட்டனர். அதனுல்



துரியோதனன் தன்னிடம் வந்த பெரியவர்களை நோக்கி, "மழைக்காலம் பார்த்து வந்திருக்கிறீர்களே! இப்போது உலர்ந்த விறகுக்கு எங்கே போவது! வேள்வியை வேறொரு காலத்தில் தள்ளி வைத்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லி, அவர்களை அனுப்பிவிட்டான்.

'கன்னனிடம் போய்க் கேட்டால் யாகத்துக்கு அவசியமான அவ்வளவு விறகும் கிடைக்கும்' என்று எவரோ அந்தப் பெரியோர்களிடம் கூறினர். உடனே பெரியவர்கள் கன்னனை அணுகித் தங்கள் விருப்பத்தை அறிவித்தார்கள்.

"இன்று முதல் மூன்று நாளில் உங்கள் இருப்பிடத்துக்கு நூறு வண்டி விறகு வந்துவிடும்; நீங்கள் கவலைப்படாமல் போய்ச் சேருங்கள்" என்று கன்னன் அவர்களுக்கு ஆறுதல் கூறி அனுப்பினான்.

கன்னனும் விறகு கேட்க வந்த பெரியோரும் பேசிக்கொண் டிருந்தபோது துரியோதனன் கன்னனருகில் இருந்தான். 'எங்கும் விறகு அகப்படாத காலத்தில் விசாரியாமலே கன்னன் நூறு வண்டி விறகை எப்படித் தருவதாக வாக்களித்தான்? இந்த வாக்கை அவனால் நிறைவேற்ற முடியாதே! என்ன செய்கிறானோ பார்க்கலாம்?' என்று துரியோதனன் கவனித்து வரலானான்.

பெரியவர்களிடம் கன்னன் சொல்லியபடி மூன்றும் நாள், நூறு வண்டி விறகும் யாகசாலையை

அடைந்தது. விறகு எங்கும் கிடைக்காததால் கன்னன் தன் அரண்மனையின் பல பாகங்களை இடித்துத் தள்ளி அவற்றில் இருந்த விட்டங்கள், சட்டங்கள், தூண்கள் முதலியவற்றைப் பிளந்து, நூறு வண்டிகளில் அனுப்பினான் என்ற தகவல் பிறகு துரியோதனனுக்குத் தெரிந்தது.

அவன் கன்னனை அணுகி, "நண்பா! அற்ப விறகுக்காக அரண்மனையை இடிப்பதா? உன் தரும குணம் அழகாக இருக்கிறது!" என்று அவனைப் பழித்தான்.

"நண்பா! ஒன்று இல்லை என்று ஏங்கி, நம்மை அணுகிக் கேட்பவர்களுக்கு நாமும் இல்லை என்று சொல்லுவதா? அரண்மனையைவிட யாகம் முக்கிய மானது. மேலும் இல்லை என்னாமல் ஈதலே என் கடன். ஈவோர்க்கு அரிய பொருள் ஒன்றும் இல்லை" என்றான்.

இதனைக் கேட்ட துரியோதனன், 'நான் பெரிய அரசன்; பெரிய இராஜ்ஜியத்தைப் படைத்தவன்; என்னிடம் வந்த பெரியார்க்கு இந்த அற்ப தரு மத்தைச் செய்ய எனக்கு யோசனை இல்லாமல் போயிற்றே! யோசனை தோன்றியிருப்பினும் அரண் மனையை இடிக்க மனம் வந்திராதே!' என்று எண்ணிக்கொண்டான்.

# 7. சகவாச தோஷம்

துரியோதனனுக்கு அடுத்த தம்பி துச்சாதனன் என்பவன். அவன் மிகவும் பொல்லாதவன். பாம்புக்குப் பல்லிலும் தேளுக்குக் கொடுக்கிலுந் தான் விஷம் உண்டு. துச்சாதனனுக்கோ உடம்பெல்லாம் விஷம். துரியோதனன், "எள்ளைக் கொண்டுவா, தம்பி!" என்ருல் அவன் எண்ணெயையே கொண்டுவந்துவிடுவான். ஒருவனைப் பார்த்துவா என்ருல் அவனைத் தூக்கி வந்துவிடுவான். அவன் மனம், தப்பு வழிகளையே நாடியது. துரியோதனன் எதற்கும் துச்சாதனனது யோசனையைக் கேட்கத் தவறுவதே இல்லை.

நீங்கள் சகுனி என்ற பெயரைக் கேட்டிருக்கலாம். இருவர் நடுவில் கலகம் மூட்டிவிடுகிறவனை நாம் சகுனி என்கிருேம். உண்மையாகச் சகுனி என்ற பெயரில் ஒருவன் இருந்தான். அவன் காந்தார தேசத்து வேந்தன். துரியோதனன் முதலியவர்களுக்குத் தாய் மாமன். சூதாடுவதில் கைதேர்ந்தவன்; வஞ்சனையே ஒரு வடிவு எடுத்தாற்போன்றவன்.

அவனிடத்தில் துரியோதனனுக்கு அளவு கடந்த அன்பு. அவனுக்கு இராஜ்ஜியத்தில் விசேஷ சலுகை, அந்தஸ்து, அதிகாரம் எல்லாம் உண்டு. அவன் யோசனை இன்றி எதையும் துரியோதனன் தானுகத் தீர்மானிப்பதே இல்லை. அடிக்கடி துரியோதனன் தன் மாமன் சகுனியை நோக்கி, "உன்னுலே அல்லவோ உலகத்தை ஆள்கிறேன், சகுனி

மாமா!" என்ற பல்லவியைப் பாடுவான். துரியோ தனனுக்கு நன்மை வரத்தக்க எந்த யோசனையும் சகுனி வாயில் பிறவாது.

சகுனி, துச்சாதனர்களின் சேர்க்கையால் துரியோதனன் மனம் மாறினன். அவன் கொடியவன் என்று பேர் எடுத்தான். அவர்கள் காட்டிய தீய வழியிலேயே நடந்துவரலானன். இளமை முறுக்கு, செல்வக்கொழுப்பு, உயர்ந்த அதிகாரம், முட்டாள் தனம் இத்தனையும் அவன் அழிவுக்குத் துணையாக நின்றன.

கன்னன், துரியோதனனை நல்வழிப்படுத்த முயன்ருன். துச்சாதனன், சகுனி இவர்கள் யோசனைகள் சரியல்லவென்று கூறிவந்தான். ஆயினும் சகுனி, தன் பேச்சு வன்மையால் கன்னன் வாயை அடக்கிவிடும் ஆற்றலைப் பெற்றிருந்தான். துரியோதனனைத் தன் முயற்சியால் நல்வழிப்படுத்த முடியாமற் போகவே கன்னன், தானும் அவனுடன் இருந்து அவன் மகிழும்படியான செயல்களில் பங்கெடுத்துக்கொண்டான். 'நண்பன் தப்பு வழியிற் செல்லாமல் தடுக்க வேண்டும். அது முடியாமற் போனல் தப்பு வழியில் செல்பவனுக்கு ஏற்படும் தீமைகளைத் தானும் உடனிருந்து அநுபவித்தே தீர வேண்டும்' என்பது கன்னனுடைய கொள்கை. குளத்தில் நீர் இருக்கும் வரையில், கொக்கு, மீன் குத்தி முதலிய நீர்ப்பறவைகள் அந்தக் குளத்தை அண்டி நிற்கின்றன. நீர் வற்றிப்போனல் அவை குளத்தை நாடுவதே இல்லை. துரியோதனன் விஷயத்தில் கன்னன் இப்படி நடந்துகொள்ளவில்லை,

பொல்லாதாரின் சகவாசத்தால் இவனும் துஷ்டன் என்று பேர் எடுத்தான். துரியோதனன் துச்சாதனன், சகுனி, கன்னன் ஆகிய இந்த நால்வரின் கூட்டத்தை மற்றவர்கள் வெறுத்துவந்தனர். இவர்கள் சேர்க்கைக்குத் 'துஷ்ட சதுஷ்டயம்' என்ற பேரும் ஏற்பட்டது.

கன்னன், சிறந்த தான தருமங்கள் செய்து வந்தும், அச்செயல் பிறருக்குத் தெரிந்திருந்தும் அவனது துஷ்ட சகவாசத்தால் ஜனங்கள், 'கன்னன் ஆடம்பரத்தின் பொருட்டு அறம் செய்கிறவன்' என்று அவனைத் தூஷிக்கலானார்கள்.

தினந்தோறும் கன்னன் காலையில் எழுந்து ஸ்நானம் செய்து, பூஜையை முடித்துக்கொள்வான். பிறகு தன்னைத் தேடி வருகிறவர்களுக்குத் தான தர்மங்கள் செய்வான். இதற்குள் முற்பகல் கழிந்துவிடும். முற்பகல் முடியும்வரை தானதருமம் செய்வதைக் கன்னன் விரதமாகக் கொண்டான். முற்பகல் தீர்ந்தபின், உண்டுவிட்டு, அரச காரியங்களைக் கவனிக்கச் சென்றுவிடுவான். பிற்பகலில் தானம் வாங்க எவரும் வரக்கூடாது. ஏனெனில் இவனுக்கு அந்த நேரத்தில் ஓய்வே இராது.

கன்னனிடம் இருந்த இந்தக் குணத்தை, அவனை வெறுத்து வந்தவர்கள் இழிவாக நினைத்து வந்தனர். 'யாசகன் எப்போது வந்து கேட்டாலும், கொடுக்கிறவன் கொடுக்கவேண்டும்; ஆனால் கன்னன் அப்படி இல்லை. ஒரு பகலில் பாதி நேரத்தையே தானதருமம் செய்வதற்கு ஒதுக்கி வைத்திருக்கிறான்' என்று ஏசினார்கள். தமிழில், 'கன்னன்

பாதி காவிரி பாதி!' என்று ஒரு பழமொழி உண்டு. சோழ நாட்டில் காவிரி நதியின் பாசனம் வருஷத்தில் பாதிக்குத்தான் உதவுகிறது. இதனுல் கன்னனுடைய செயலைக் காவிரியின் செயலோடு சேர்த்து, ஜனங்கள் இந்தப் பழமொழியை வழங்குகிருர்கள்.

துரியோதனன், பாண்டவர்களை வெறுத்து, அவர்களுக்குப் பல துன்பங்களை இழைத்து வந்தான். அவன் செயலைத் தடுக்கக் கன்னனுல் இயலாதபடியால் தானும் பாண்டவர்களிடம் பகைமை கொண்டான். பாண்டவர்களில் கன்னனுக்குச் சமபலமுடைய வில்வீரன் அர்ஜுனன். ஆதலால் கன்னன் அர்ஜுனனைத் தன் பகைவனுகக் கருதினுன்.

'கன்னன், தன் நண்பனுக இருக்கும்வரை எவரும் தன்னை வெல்லமுடியாது!' என்ற நம்பிக்கை துரியோதனனுக்கு இருந்தது. இந்தத் துணிவினுல் வணங்காமுடி மன்னனுக இருந்தான் அவன். பீஷ்மர், துரோணர், விதுரர் முதலியவர்களின் வீரத்தையும் அவன் மதிக்கவில்லை. பல தடவை இவர்களை அவன் இழிவாகப் பேசியதும் உண்டு. துரியோதனன் தங்களை இழிவாகப் பேசுவதற்குக் கன்னன் காரணமென்று எவரும் எண்ணி, அவனை மேலும் வெறுக்கலானுர்கள். அவர்களில் முக்கியமானவர் பீஷ்மர். கன்னனும் பீஷ்மரும் பாம்பும் கருடனும்போலும், யானையும் சிங்கமும்போலும் பழகிவந்தனர்.

# 8. இராஜ சூயத்தில் கன்னன்

ஒரு காலத்தில் பாண்டவர்கள் பெரிய யாகம் ஒன்றைச் செய்தார்கள். அரசர்களை வென்று, அவர்கள் கொடுக்கும் பொருளைக் கொண்டு செய்யும் வேள்வி அது. அதனை இராஜ சூயம் என்பார்கள். யாகம் நடக்கும் தினங்களில் வருகிறவர்களுக்கு அன்னமிட வேண்டும். மிகுதியாகத் தான தருமங்கள் செய்யவேண்டும்.

பாண்டவர் செய்த இராஜ சூய யாகத்துக்குத் துரியோதனன் முதலியவர்கள் சென்றிருந்தார்கள். எல்லோரும் ஒரு குலத்துத் தாயாதிகள் ஆதலால் பாண்டவர்கள், துரியோதனன் முதலியவர்களை நல்ல நிலையில் வைத்துக் கௌரவப்படுத்தினார்கள்.

வேள்வி நடந்துவந்த தினங்களில் பொறுப்புள்ள வேலைகளை அந்த அந்தத் துறையில் திறமை வாய்ந்தவரிடம் தருமர் ஒப்பித்தார். பொக்கிஷ அறையைத் துரியோதனனிடம் ஒப்படைக்கும்படி கண்ணபிரான் தருமருக்கு ஆலோசனை கூறினார். பொக்கிஷ அறையின் பணத்திலிருந்து தானதருமங்கள் செய்யும் பொறுப்பைக் கன்னனிடம் ஒப்படைக்குமாறும் கண்ணபெருமான் ஏற்பாடு செய்தார்.

'இந்தப் பொக்கிஷ அறையை நான் இரண்டு தினங்களில் காலி செய்துவிடுகிறேன்! நடுவில் யாகத்துக்குப் பணம் இல்லாமல் தருமன் திண்டாடட்டும்!' என்று, பொருமை காரணமாகத் துரியோதனன் எல்லாச் செலவுகளுக்கும் பொருள் கணக்கு

வைக்காமல் அள்ளி அள்ளி வீசினுன். கன்னன், இயல்பிலேயே தரும சிந்தையுள்ளவன் அன்றோ? ஆதலால் அவன் தானதருமம் செய்வதில் மகிழ்ச்சி கொண்டு, கேட்கிறவர்களுக்கெல்லாம் பொன்னை யும் வெள்ளியையும் வாரி வாரிக் கொடுத்தான்.

இதனைக் கண்ட சிலர், 'இவர்கள் இருவரும் இப்படித் தூரபாரியாகச் செலவு செய்தால் கஜானு விரைவில் காலியாகிவிடுமே! வேறு நாட்களின் செலவுகளுக்கு எங்கே போவது!' என்று தருமரிடம் கூறினுர்கள். தருமர் அதனைக் கண்ணபிரானிடம் சொன்னுர்.

அதனைக் கேட்ட கண்ணபிரான், "இதைப் பற்றி நீ ஏன் கவலை கொள்கிருய்? துரியோதனன் கையில் தனரேகை இருக்கிறது. அவன் அள்ள அள்ளப் பொக்கிஷம் நிறைந்துகொண்டே வரும். கன்னன் பொருளை வாரி வாரி இறைத்தாலும் தானம் பெற்றுச் செல்லுகிறவர்கள், 'தருமபுத்திர ருடைய யாகத்தில் நமக்கு ஏராளமாகப் பணம் கிடைத்தது! அவர் சிறப்பாக யாகம் செய்தார்!' என்றுதான் சொல்லிக்கொள்வார்கள்; அந்தப் பெருமை துரியோதனனையோ கன்னனையோ சேராது; உன்னைத்தான் சேரும். இவ்வளவை யும் கருதியே நான் துரியோதனனையும் கன்னனை யும் இந்தப் பணியில் அமைத்திருக்கிறேன்" என்று கூறினுர்.

கன்னனுடைய கொடைக்குணம் அல்லவா அவன் தருமபுத்திரருடைய யாகத்தில் மற்றவரை விட உயர்ந்ததும் பொறுப்புள்ளதுமான உத்தியோ கத்தை வகிக்கும்படி செய்ததற்குக் காரணம்!

# 9. அர்ஜுனனைக் கொல்லும் அம்பு

ஒரு சமயம் அர்ஜுனன் ஒரு வனத்தை அக்கினி பகவானுக்கு உணவாக அளித்தான். அது இந்திரனுடைய வனம். இந்திரன், மழை பெய்வித்துத் தீயை அணைக்க முயன்றான். எரியும் காட்டின்மீது மழைநீர் படாமல் அர்ஜுனன் அம்புகளால் தடைசெய்தான். அதனால் இந்திரனுக்கும் அர்ஜுனனுக்கும் போர் நிகழ்ந்தது. தட்சகன் என்னும் பாம்பு இந்திரனுடைய நண்பன். தட்சகனுடைய மனைவியும் மகனும் காட்டுத் தீயில் அகப்பட்டுக் கொண்டனர். தாய், தன் மகனை வாயில் கௌவிக் கொண்டு மேலே பறக்கும்போது அர்ஜுனன் அம்பால் அடித்ததால் தாயின் கழுத்தும் குட்டியின் வாலும் அறுபட்டன. வால் அறுபட்ட குட்டியை இந்திரன் காப்பாற்றி எடுத்துச் சென்றான். அந்தக் குட்டி, அர்ஜுனன்மீது கடுஞ்சினங் கொண்டது. இறைவனை நோக்கித் தவம் செய்தது. இறைவன், "உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். "அர்ஜுனனைக் கொல்லும் ஆற்றலை எனக்கு அருளவேண்டும்" என்று தட்சகன் மகன் வரம் கேட்டான். அதற்கு இறைவன், "நீ, நாகாஸ்திரமாக மாறக்கூடிய சக்தியை உனக்கு அளித்தேன். அர்ஜுனனுக்குத் தக்க பகைவனைத் தேடி அண்டிக் கொள். அப்பகைவன் அம்பாக, உன்னை வில்லில் வைத்துத் தொடுப்பான். அம்பு, அர்ஜுனன்மீது பட்டதும் அவன் இறந்துவிடுவது திண்ணம்" என்று வரங்கொடுத்துக் கடவுள் மறைந்தார்.

அர்ஜுனனுக்கு ஏற்ற பகைவன் கன்னனே என்று பாம்பு மகன் அறிந்துகொண்டான். பிறகு கன்னனிடம் சென்று, இறைவனிடம் தான் பெற்ற வரத்தைப்பற்றிக் கூறினன். கன்னன் மகிழ்ச்சி கொண்டு, அவனை அம்பாக உபயோகிப்பதாக வாக்களித்தான்.

இந்த நாகாஸ்திரம் தன்னிடம் இருப்பதால் அர்ஜுனனை எளிதில் கொன்றுவிடலாம் என்று கன்னன் நம்பியிருந்தான். இந்த நாகாஸ்திர வரலாற்றை அவன் எவரிடமும் கூறவில்லை. இரகசியமாகவே வைத்திருந்தான்.

# 10. கண்ணபிரானின் சூழ்ச்சிகள்

பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் பகை முற்றியது. பாண்டவர்களுக்கு உரிய தாய பாகத்தைக் கொடுக்கத் துரியோதனன் மறுத்துவிட்டான். பாண்டவர்களில் மூத்தவரான தருமர், இரு கட்சியாருக்கும் யுத்தம் நேராமல் தடுத்துத் தங்கள் பங்கை வாங்கி வருமாறு கண்ணபிரானைத் துரியோதனனிடம் தூதனுப்பினார். கண்ணனுடைய அறிவுரைகளைத் துரியோதனன் ஏற்றுக்கொள்ளவில்லை. 'தங்களுக்குரிய பாகத்தைப் பாண்டவர்கள் யுத்தத்தின் மூலம் பெற்றுக்கொள்ளட்டும்!' என்று துரியோதனன் கூறிவிட்டான்.

அஸ்தினாபுரியில் இருந்தபடியே கண்ணபிரான் நிகழப்போகும் பாரதப் போரைப்பற்றி ஆலோசித்தார். துரியோதனனுடைய கட்சியின் பலத்தில் பாதிகூடப் பாண்டவர் கட்சிக்கு இல்லை என்பதை அவர் உணர்ந்தார். எதிர்க் கட்சியில் பாண்டவர்களால் வெல்ல முடியாதவர்கள் விதுரர், அசுவத்தாமா, கன்னன் என்னும் மூவரே. இவர்கள் துரியோதனன் கட்சிக்குப் பயன்படாமல் போகும் சூழ்ச்சியைக் கண்ணபிரான் தேடினார்.

விதுரருக்கும் துரியோதனனுக்கும் மனஸ்தாபம் ஏற்படும் செயலைச் செய்தார். துரியோதனனுடைய கோப மொழிகளால் விதுரர், 'நான் போர் செய்யேன்!' என்று சொல்லித் தம் வில்லை முறித்து எறிந்துவிட்டார். அசுவத்தாமன்மீது துரியோதனனுக்கு ஐயம் பிறக்கும் உபாயம் தேடினார். 'அசுவத்தாமா பாண்டவருக்கு உள் ஆள்; அவனை நாம்

துரியோதனன் அவனுக்குத் தன் கட்சியில் முக்கிய மான பதவியைக் கொடுக்கவில்லை.

கன்னனைத் துரியோதனனிடமிருந்து எப்படிப் பிரிப்பது என்பது கண்ணனுக்குப் பெரிய காரியம் ஆகிவிட்டது. 'கன்னனுக்கும் துரியோதனனுக் கும் நெருங்கியுள்ள நட்பு எவராலும் பிரித்தற் கரியது. 'பிரிக்கும் முயற்சியை மேற்கொள்வோம். அது முடியாமற் போதலும் கூடும். போனல் கன்னனுடைய பலத்தை ஒழிக்க வழி தேடுவோம். அவனைப் பல்லைப் பிடுங்கிய பாம்பாக்கி விடுவோம்' என்று கண்ணபிரான் யோசித்து, ஒரு முடிவிற்கு வந்தார்.

மகாவிஷ்ணுவே கண்ணபிரானுக அவதாரம் செய்திருந்ததால் அவருக்கு மூன்று காலங்களின் செய்திகளும் தெரியும். கன்னன் எப்படி எவருக்குப் பிறந்தான் என்பதையும் அவர் அறிந்திருந்தார். அதனுல் அவர் கன்னனை அணுகி, "கன்னனே, உன் தாய் பாண்டவர்களின் தாயாகிய குந்திதேவி; சூரியன் உன் பிதா" என்ருர். துரியோதனனிடத்தி லிருந்து தன்னைப் பிரித்துவிடக் கண்ணபிரான் செய்யும் சூழ்ச்சி இது என்று எண்ணிய கன்னன், அவர் மொழிகளை அலட்சியம் செய்தான்.

குந்திதேவியையே நேரில் அனுப்பிக் கன்ன னுடைய பலம் துரியோதனனுக்குப் பயன்படாமற் போகச் செய்ய வேண்டுமென்று மேலும் கண்ண பிரான் எண்ணினுர். இந்திரனைக் கன்னனிடம் அனுப்பி, அவனது கவச குண்டலங்களைத் தான மாகப் பெற்று வரும்படி திட்டமிட்டார்.

கண்ணபிரானுடைய சூழ்ச்சிகளில் எதுவும் வீண் போகவில்லை. விவரம் பின்னுல் கூறப்படும்.

# 11. இந்திரனுக்குத் தானம் வழங்கல்

ஒருநாள் சாயங்காலம் தொண்டு கிழவர் ஒருவர் கன்னனது அரண்மனையை அடைந்தார். மூப்பின் தளர்ச்சியினால் அவர் சோர்ந்திருந்தார். வாயில் காப்போர், "எங்கள் தலைவர் முற்பகல் அளவும் தானம் கொடுத்துவிட்டு, வேறு வேலைகளைக் கவனிக்கச் சென்றுவிட்டார். நீங்கள் இப்பொழுது வந்திருக்கிறீர்களே!" என்று கூறினார்கள்.

இவர்கள் பேச்சு உள்ளே இருந்த கன்னன் காதுகளில் விழவே, அவன் விரைந்து வெளியே வந்தான். தன்பால் வந்த அந்தணரை அன்புடன் வரவேற்று உபசரித்தான்.

"நான் மேருமலையில் தவம் செய்கிறவன். மூப்பின் தளர்ச்சியால் முற்பகலில் வர இயலவில்லை. அரியதொன்றைப் பெற்றுப் போக உங்களிடம் வந்துள்ளேன்" என்று வந்தவர் கூறினார்.

"நீங்கள் எப்பொழுது வந்தால் என்ன? கால வரையறை குறுக்கே நிற்காது. என் உயிரை வேண்டினும் தருகிறேன். விரும்பி வந்தவற்றைக் கேளுங்கள்" என்றான் கொடை வீரன்.

பிராம்மணர் இருமிக்கொண்டே, "உம்முடைய கவச குண்டலங்களைக் கொடுங்கள்" என்று கேட்டார். அந்தப் பொருள்களின் அருமையைக் கன்னன் உணர்வான். அந்தணர் கேட்டவுடன் அவன் தன் கவச குண்டலங்களை முக மலர்ச்சியுடன் கழற்றலானான்.

விண்ணின் மேற்பால், மறையும் தருணத்தில் இருந்த சூரியன், "கன்ன! இவன் அந்தணன் அல்லன்; அர்ஜுனனுடைய தந்தையாகிய இந்திரன். உன்னை வஞ்சித்து இவைகளைப் பெற்றுப் போக இந்த உருவில் வந்துள்ளான், ஜாக்கிரதை!" என்று எச்சரித்தான்.

"யாசகம் கேட்கிறவன் நண்பன பகையாளியா, உண்மையாகக் கேட்கிருன வஞ்சனையாகக் கேட்கிருன என்று தானங் கொடுப்பவன் யோசித்தல் கூடாது. இவன் இந்திரனுயின் தானம் ஏற்பதற்கு இவனைவிட மேலானவன் யார்! என் கவச குண்டலங்கள் போனல் என்ன! அப்பொழுதும் அர்ஜுனன் என்னை வென்றுவிட முடியுமா! ஈதலே என் கடன்" என்று கன்னன் சொல்லிக்கொண்டு, கவச குண்டலங்களை, இந்திரன் கையிற் கொடுத்தான். பிறகு இந்திரன் தன் உண்மை உருவை அவனுக்குக் காட்டி, அவனை வாழ்த்திவிட்டுச் சென்ருன்.

தன்னுடன் பிறந்த குண்டலங்களைக் கழற்ற முடியாமல் கன்னன் தன் காதுகளை அறுத்தும் அவைகளைக் கழற்றிக் கொடுத்தான் என்று சிலர் சொல்லுகிருர்கள்.

## 12. குந்தியும் கண்ணபிரானும்

பாண்டவர்கள் வனவாசத்தில் இருந்த சமயம் குந்தி அஸ்தினுபுரியில் வசித்து வந்தாள். அஸ்தினு புரிக்குத் தூதுவந்த கண்ணன், அவளைக் காணச் சென்ருர். பாண்டவர்கள் சௌக்கியமாக நாடு வந்து சேர்ந்ததை அவர் அவளிடம் கூறினுர். பாண்டவர்களுக்காகத் தான் தூது வந்திருப்ப தாகவும் பேச்சு வார்த்தைகள் முறிந்து, யுத்தம் ஏற்படப் போவதாகவும் சொன்னுர்.

அதனைக் கேட்டுக் குந்தி அழுதுவிட்டாள். "ஒரு குலத்தில் பிறந்த அண்ணன் தம்பிகள் தங்களுக்குள் சண்டையிடுவதா! யுத்தத்தில் என் மைந்தர்கள் என்ன ஆவார்களோ!" என்று அவள் கவலைக்கு உள்ளானுள். பாண்டவர்களைக் காப் பாற்றும் விஷயமாகத் தாம் பலவிதங்களில் முயன்று வருவதாகக் கண்ணபிரான் மொழிந்து, அவளைத் தேற்றினுர்.

பிறகு அவர் குந்தியை நோக்கி, "அத்தையே! நீங்கள் கன்னியாக இருக்கையில் உங்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்ததும் அதனை நீங்கள் ஒரு பேழையில் வைத்து, ஆற்றில் விட்டதும் நினை விருக்கிறதா?" என்ருர்.

இந்த இரகசியம் கண்ணபிரானுக்கு எப்படித் தெரிந்தது என்று அவள் திடுக்கிட்டுப் போனுள்.

"அந்தக் குழந்தைதான் கன்னன். நாளும் நாளும் அரிய தானங்களைச் செய்யும் உத்தம புருஷன் அவன்" என்ருர் கண்ணன்.

"கன்னன் என் பிள்ளை என்பதை முன்பு கூறாமல் அர்ஜுனனுக்கும் அவனுக்கும் பகைமை முற்றிப்போய், யுத்தம் தொடங்குகிற சமயத்தில் சொல்லுகிறாயே! என்ன எண்ணி எதைச் செய்ய முனைந்தாய்?" என்று குந்தி சொன்னாள். அவளுக்குக் கண்ணன் நெருங்கிய உறவினன். ஆதலால் அவள் இவ்வாறு உரிமையுடன் பேசினாள்.

"அத்தையே! நான் சொல்வதைக் கேள். நீ இப்போது கன்னனிடம் போய் நீதான் அவன் தாய் என்பதை, அவன் கேட்கிற கேள்விகளுக்குப் பதில் கூறி ருசுப்படுத்து. பிறகு அவனைப் பாண்டவர் கட்சிக்கு அழைத்து வா" என்றார் கண்ணபிரான்.

"சரி அப்படியே செய்கிறேன்" என்றாள் குந்தி.

"அத்தையே! இது எளிதான செயல் என்று எண்ணிவிடாதே. அவனுக்கும் துரியோதனனுக்கும் நெருங்கிய நட்பு இருப்பதனாலும் கன்னன் நன்றி மறவாத நண்பன் ஆதலாலும் எளிதில் அவன் உன் வார்த்தைகளுக்கு இணங்கமாட்டான். அவன் பாண்டவர்பால் வர மறுத்துவிட்டால் என் செய்வாய்?" என்றார் கண்ணன்.

"நீதான் வழி சொல்லவேண்டும்" என்று வருந்திக் கூறினாள் குந்தி.

"அத்தையே! கன்னன் மகா பலமுடையவன். அர்ஜுனனைத் தவிர நம் கட்சியில் வேறு எவரும் போரில் அவன் முன் நிற்கமுடியாது. அதனால் யுத்தத்தில் அர்ஜுனனோடு அல்லாமல் மற்றத் தம்பிமாருடன் சண்டை செய்வதில்லை என்று கன்னனிடம் ஒரு வரம் கேள். அதை அவன்

மறுக்காமல் தந்துவிடுவான். அவன் ஒரு நாகாஸ் திரம் வைத்திருக்கிறன். அந்த அம்பு அர்ஜுன னைக் கொல்லும் சக்தி வாய்ந்தது. அதனை அர்ஜுனன் பேரில் ஒரு தடவைக்கு மேல் போடுவ தில்லை என்று நீ கன்னனை மற்றொரு வரம் கேள். இரண்டு வரங்களையும் பெற்றுக்கொண்டு வந்து விடு" என்றார், மாயனார்.

"அப்பா, கண்ணா! நீ சூழ்ச்சியில் கை தேர்ந் தவன். இரு கண்களில் எந்தக் கண் குருடானால் என்ன? ஒரு மகன் உயிர் தப்பும் பொருட்டு மற்றொரு மகனைக் கொல்ல நான் சூழ்ச்சி செய்வது தகுமா?" என்று குந்தி அழுதாள்.

"பாண்டவர்கள் ஐந்து தலை நாகத்தைப் போன்றவர்கள். ஒரு தலையை இழந்தாலும் ஐந்து தலை நாகம் இறந்துவிடும். பாண்டவர்களில் ஒருவன் போய் மற்றவர்கள் உயிர் வைத்திருக்க மாட்டார்கள். மற்றவர்கள் இறந்துபடுவது திண்ணம். ஐவரைக் காக்க ஒருவன் விஷயத்தில் சதி செய்வது பிழையாகாது" என்று கண்ணன் அவளைத் தேற்றினார்.

பிறகு கண்ணபிரான், குந்தியைக் கன்னனிடம் அனுப்பிவிட்டுப் பாண்டவர்கள் இருந்த ஊருக்குத் திரும்பினார்.

# 13. தாயும் சேயும்

இந்திரனுக்கு அரிய தானம் வழங்கிய மகிழ்ச்சி யோடு கன்னன் இருக்கும் சமயத்தில் வாசல் காப் போர் அவனை அணுகினர். பாண்டவரின் தாயான குந்திதேவ கன்னனைக் காண வாசலில் காத்திருப் பதை அவர்கள் கூறினர்கள்.

உடனே அவன் வாசலுக்கு விரைந்து சென் ருன். குந்தியை நோக்கி, "அம்மையீர், வணக்கம்! மாபெரும் தீரர்களும் புவியாளும் உரிமை வாய்ந்த வர்களுமான பாண்டவர்களின் தாயான நீர், இந் நேரத்தில் கால் நோவ வருவதா?" என்று சொல்லி வரவேற்ருன்.



"உள்ளே வாருங்கள்" என்று கூறி, அழைத்துச் சென்ருன். அவருடைய தகுதிக்கு ஏற்ற உயர்ந்த ஆசனத்தில் அமரச் செய்தான். அவள் வந்த காரியத்தைச் சொல்லும்படி வேண்டினுன்.

குந்தி தழுதழுத்த குரலில், "அப்பா! நான் உன் தாயடா! சிறுவயதில் உன்னை எடுத்து வளர்க்கப் பாக்கியம் செய்யாத பாவியடா!" என்ருள். அவள் கண்களில் நீர் பெருகியது.

குந்தியின் வார்த்தைகளைச் செவியுற்ற கன்னன் அஃது மாயனுர் சூழ்ச்சி என்று கருதினுன்.

அவன் வாய் திறப்பதன் முன் குந்தி, கன்னன் பிறந்த வரலாற்றையும், அவள் அவனை ஒரு பேழையில் வைத்து, ஆற்றில் விட்டுவிட்ட நிகழ்ச்சியையும் கூறினுள்.

அதற்குக் கன்னன், "அம்மையீர்! தாங்கள் என் தாய் என்பதை நான் எங்ஙனம் நம்ப முடியும்? பலர் இதற்குமுன் என் தாய் என்று உறவு கொண்டாடி வந்தனர். என்னிடம் ஓர் ஆடை உள்ளது. உண்மைத் தாயைத் தவிர மற்ருேர் அதைப் போர்த்துக்கொண்டால் தட்சணமே வெந்து எலும்பாவார்கள். என்னிடம் வந்த போலித் தாய் மாரின் கதி இப்படி ஆயிற்று. அடாது செய்பவர் படாது படுவர் என்பது உண்மை அன்ருே?" என்ருன்.

"மகனே! எங்கே, அந்த ஆடையை எடுத்து வா. நான் உன் தாய்தான் என்பது ருசுவாகி விடும்" என்ருள் குந்தி.

ஆடை வந்ததும் அதை எடுத்து, 'விரித்து உதறித் தன் உடலில் போர்த்துக்கொண்டாள். குந்திதான் தன் உண்மைத் தாய் என்பது உடனே கன்னனுக்கு விளங்கிற்று. உடனே அவன், அவள் திருவடிகளில் வீழ்ந்து, புழுதி படிந்த அவளது பாதங்களைத் தன் கண்ணீரினுல் கழுவித் தூய்மை ஆக்கினுன். தன் பிறப்பையும் குலத்தையும் உணர்ந்துகொண்டதனுல் அவனுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

குந்திதேவி, அவன் முதுகைத் தடவிக் கொடுத்து உச்சிமோந்து, "உன் இளமை விளை யாட்டு முதலியவற்றைக் கண்டு களிக்காத பாதகி நான்!" என்று கண்ணீர் வடித்தாள்.

அப்போது கன்னன், தாயின் கண்ணீரைத் துடைத்து, "அம்மா! சென்றதை உன்னிக் கன்று வது நன்றன்று; தாங்கள் வந்த காரியம் யாது? தாங்கள் விரும்புவது யாது?" என்று வேண்டி ஞன்.

"மகனே! நீ பாண்டவர் பக்கம் வந்துவிடு. ஐவரும் அன்பினுல் உன் மலரடி வணங்கி, ஆர்வம் பெருக உனக்கு ஏவல் செய்வார்கள். தருமன் குடை கவிக்க, பீமனும் அர்ஜுனனும் உடைவாள் தாங்க, நகுல சகாதேவர்கள் வெண்கவரி வீச, நீ அரியணையில் அமர்ந்து ஒரு குடைக்கீழ் உலகம் முழுவதையும் ஆளலாம்" என்ருள் குந்தி.

"அம்மா, துரியோதனனுக்கும் பாண்டவர்க ளுக்கும் போர் தொடங்கிவிட்டது. இப்பொழுது தாங்கள் என்னிடம் வந்து, பலவாறு சொல்லிப் பாண்டவர் கட்சியில் வந்து சேர்ந்துகொள்ளுமாறு தூண்டுவதால் பயன் இல்லை, மேலும் ஒன்று கவனிக்கத்தக்கது.

"இன்னவன் என்று அறியாத என்னை முடி சூட்டி அரசனாக்கி, ஓர் இலையில் உண்டுவந்தவன் துரியோதனன். அவன், தன் தம்பிமாரையும் எனக்கு ஏவல் செய்யக் கட்டளை இட்டிருக்கிறான். எனக்கும் அவனுக்கும் பேதம் இல்லை" என்றான் கன்னன்.

ஒருநாள் அந்தப்புரத்தில் தானும் துரியோதனன் மனைவியும் சதுரங்கம் ஆடும்போது நிகழ்ந்ததையும் விளக்கினான்.

"அப்படியானால் நீ, வரவிருக்கும் பாரத யுத்தத்தில் அர்ஜுனனைத் தவிர மற்றத் தம்பிமார் நால்வருடனும் சண்டை செய்யாமல் அவர்களைக் காப்பாற்றவேண்டும்" என்று குந்தி அவனை ஒரு வரம் கேட்டாள்.

"அப்படியே வரம் தந்தேன்" என்று கன்னன் சொன்னான்.

பிறகு குந்தி, "மகனே! உன்னிடம் இருக்கும் நாகாஸ்திரத்தை அர்ஜுனன்மீது ஒரு தரத்துக்கு மேல் பிரயோகிக்கக்கூடாது" என்று மற்றொரு வரம் கேட்டாள்.

"அன்னையே, இதனை ஒரு வரமாகக் கேட்க வேண்டுமா! ஒரு தடவை விட்ட அம்பினால் மாளாமல் பகைவன் தப்பினால் அவனைக் கொல்லுமாறு மறுபடியும் அந்த அம்பை எய்வது அறமோ, ஆண்மையோ, அன்றி வீரருக்கு அழகோ! நீங்கள் வரமாகக் கேட்பதால் இதனையும் ஈந்தேன்" என்றான் கன்னன்.

இதன் பின் குந்திக்குத் துக்கம் நெஞ்சை அடைத்துக்கொண்டது. "நான் எவ்வளவு பொல்லாதவளாக உன் விஷயத்தில் இருக்கிறேன். உங்கள் கண்முன் எமன் என்னைக் கொண்டுபோக

மாட்டானா? அப்பொழுது எனக்கு விசனம் இராதே'' என்று பதறி அழுதாள்.

கன்னன் தன் தாயைத் தேற்றி, "அன்னையீர்! நீங்களும் எனக்கு இரு வரங்களை அருள வேண்டும்'' என்று வேண்டினான். குந்தி அதற்கு இசைந்தாள்.

"தாயே! நான் உமக்கு மகன் என்பதை என் உயிர் போகும் வரையில் பாண்டவர்களுக்கோ பிறருக்கோ அறிவியாதிருங்கள். பாண்டவர்கள் இந்த இரகசியத்தை ஒரு சிறிது அறிந்தாலும் இராஜ்ஜியத்தை எனக்கே தந்துவிடுவார்கள். நான் அதனை என் உயிர் நண்பன் துரியோதனனுக்கே வழங்குவேன். அதனால் அவர்கள் தவிக்க நேரிடும். இதனை இரகசியமாகத் தாங்கள் வைத்திருப்பதே முதல் வரம்.

"உலகம் என்னைத் தேர்ப்பாகன் மகன் என்று ஏளனம் செய்கிறது. நான் போரில் இறந்துவிட்டால், தாங்கள் யுத்தகளத்துக்கு வந்து, என் உடலை மடிமீது சார்த்திக்கொண்டு, உலகம் அறிய உங்கள் துக்கத்தைத் தெரிவியுங்கள். இதுதான் இரண்டாம் வரம்'' என்றான் கன்னன் பணிவுடன்.

குந்தி, அந்த இரு வரங்களையும் அவனுக்குக் கொடுத்தாள். பிறகு இருவரும் கண்ணீரும் கம்பலையுமாகப் பிரியா விடைபெற்றுப் பிரிந்தனர்.

# 14. பீஷ்மரும் கன்னனும்

கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் பாரதப் போர் தொடங்கியது. கௌரவர்களின் கட்சிக்குப் பீஷ்மர் சேனைத் தலைவர் ஆனார். யுத்தத்தின் தொடக்கத்தில் துரியோதனன் பீஷ்மரைப் பார்த்து, இரு கட்சிகளிலும் உள்ள முக்கியமான தலைவர்களின் போர்த் திறமையை எடுத்துக் கூறும்படி கேட்டான். படைத் தலைவர்களின் திறமையைச் சொல்லிவரும்போது பீஷ்மர், கன்னனைச் சிறந்த வீரருள் ஒருவனாகச் சேர்த்துக் கூறாமல் இரண்டாம் தரத்தைச் சேர்ந்தவன் அவன் என்று கூறினார்.

இதனைக் கேட்ட கன்னனுக்குப் பிஷ்மர் மீது அடங்காத கோபம் வந்தது. ஆதியிலிருந்து பீஷ்மர் தன்னை அவமதித்து வந்ததையெல்லாம் பொறுத்துக்கொண்டிருந்த அவன் மனம், அப்பொழுது பொறுமையை இழந்தது. அவன் தன் நண்பன் துரியோதனனிடம், "இந்தக் கிழவர் யுத்தகளத்தில் இருக்கும் வரையில் நான் ஆயுதம் எடுப்பதில்லை!" என்று சொல்லிவிட்டுப் பீஷ்மர் தொலைந்த பிறகு, தான் போர்க்களம் புகுந்து துரியோதனனுக்குத் தன் உயிரையும் தியாகம் செய்யத் தயாராக இருப்பதாகச் சொன்னான்.

கன்னன் இன்றிப் போர் தொடங்கியது. பாண்டவர் கட்சியிலிருந்த சில தலைவர்களைப் பீஷ்மர் கொன்றார். என்றாலும் ஒவ்வொரு நாளும் துரியோதனன் படை குறைந்து வந்தது. ஏழாம் நாள் துரியோதனன் தம்பிமாரில் சிலரைப் பீமன் கொன்றுவிட்டான்.

அன்றிரவு துரியோதனன் பாசறையில், பீஷ்மரையும் மற்றத் தலைவர்களையும் வைத்துக் கொண்டு, ஆலோசிக்கலானான். பீஷ்மர் தலைமையில் தனக்குத் தோல்வியே கிடைக்கும் என்று வருந்தினான். தன் தம்பியரின் மரணத்தைப் பீஷ்மரால் தடுக்கமுடியவில்லையே என்று அவர்மீது காரமாகப் பேசினான். உடனே கன்னனுக்கு ஆள் அனுப்பிப் போர் செய்ய வரவேண்டும் என்று அவனை வேண்டிக்கொண்டான்.

"பீஷ்மர், யுத்தகளத்தில் போர் செய்யும் வரையில் நான் ஆயுதம் தாங்கேன். அவர், 'என்னால் பகைவரை வெல்வது சாத்தியமில்லை' என்று சொல்லி ஆயுதங்களைத் தரையில் போட்டுவிட்டால் பிறகு நான் யுத்தம் செய்கிறேன்" என்று கன்னன் தன் நண்பனுக்குச் சொல்லியனுப்பினான்.

கன்னன் சொல்லி அனுப்பிய செய்தியைத் துரியோதனன் பீஷ்மருக்குத் தெரிவித்தான். அதனைக் கேட்ட பீஷ்மர் கடுங்கோபங் கொண்டார். "துரியோதனா! நீ என்னை இந்தக் கேள்வி கேட்பதா? நான் இன்னும் மூன்று நாள் யுத்தம் செய்து பார்த்துவிடுகிறேன். வெற்றி என்பது உனக்கு என்றும் வராது; அறம் அந்தக் கட்சியில் இருக்கிறது. ஆண்டவனாகிய கண்ணபிரான் அந்தக் கட்சியைச் சார்ந்திருக்கிறார். நான் இன்னும் மூன்று நாள் போர் செய்து, விலகிக் கொண்டபின் உன்னை ஆளவைக்கும் திறமைவாய்ந்த வீரர்கள் தலைமை தாங்கி, உனக்கு வெற்றியைத் தேடித் தரட்டும்" என்று சொல்லிக் கூட்டத்தைவிட்டு எழுந்து சென்றுவிட்டார்.

தன் பாட்டனார் அவ்வாறு கூறிச் சென்றது துரியோதனனுக்குப் பிடிக்கவில்லை. என்றாலும் மூன்று நாள் வரையில் பொறுத்திருக்க அவன் உறுதி கொண்டான். பீஷ்மர், தலைமை தாங்கிப்

போர் செய்த பத்து நாட்களிலும் கன்னன் யுத்த களத்துக்கு வரவே இல்லை.

அவர் உடலில் பாணங்கள் பல பல பட்டு, எழவும் நகரவும் சக்தி இல்லாமல் பீஷ்மர் விழுந்த பிறகே கன்னன், ஆயுதம் தங்கிப் போர்க்களத்தை அடைந்தான்.

பீஷ்மர் அம்புப் படுக்கையில் இருப்பதை அறிந்த கன்னன் அவரைப் பார்க்க வந்தான். அப்பொழுதுதான் பீஷ்மரின் உயர்வும் வீரமும் உண்மையும் அவனுக்குப் புலனாயின. மன்னிப்புப் பெறவே அவன் அங்கே வந்தான். வந்தவன் அவருடைய பாதங்களைத் தொட்டு வணங்கி, “உம்மைப் போன்ற சிறந்த வீரர்கள் எந்த உலகிலும் இல்லை !” என்று போற்றினான்.

அருகிலிருந்த காவற்காரர்களை அப்புறப்படுத்தி விட்டு, பீஷ்மர் கன்னனுடன் தனிமையில் இரகசியமாகப் பேசலானார்: “கன்னா! நீ புகழ் பெற்ற இந்தக் குருகுலத்தைச் சேர்ந்தவன். சூரியனால் குந்திக்குப் பிறந்தவன். உன் முக ஒளியே உயர் பிறப்புக்கு எடுத்துக்காட்டு ! நாரதரும் கண்ணனும் சொல்ல இதனை நான் அறிந்தேன். உத்தமனாகிய நீ, துஷ்டர்களோடு சேர்ந்துகொண்டு, தர்மவான்களான பாண்டவர்களிடம் அடாதவற்றைச் சொல்லிலும் செயலிலும் காட்டியிருக்கிறாய். தர்மிஷ்டனே ! எவராலும் வெல்லுவதற்கரிய நீ, உன் சகோதரர்களாகிய பாண்டவரைச் சேர்ந்துகொள். பாரத யுத்தத்தைத் தடுக்க நான் மேற்கொண்ட முயற்சிகள் யாவும் வீணாயின. உன்னால் ஒருகால் யுத்தம் நிற்கலாம். பூமியில் இறந்தவர்கள் போக எஞ்சியுள்ள அரசர்கள் இனி உய்யட்டும். துஷ்டர்

களோடு சேர்ந்து, உத்தம குணத்தை இழந்து, அகம்பாவத்தால் நீ செய்த செயல்களுக்காகவே நான் உன்னை வெறுத்து வந்தேன். இப்பொழுது உன்மேல் எனக்கு வெறுப்பில்லை'' என்று சொல்லி, ஒரு கையால் அவனை அணைத்து, உச்சிமோந்து முத்தமிட்டார்.

துக்கத்தினால் பெருகும் நீரினால் ஒளி மழுங்கிய கண்ணோடு கன்னன், ''பிதாமகரே! உங்களை அறியாது நான் அப்பொழுது கூறிய புன்சொற்களுக்காக என்னை மன்னியுங்கள்! யுத்தத்தை என்னாலும் விலக்க முடியாது. நான் வெற்றி பெறக்கூடும் என்றாலும், தர்மம் எதிர்க்கட்சியிலேயே இருப்பதால் முடிவில் நானும் அழிய வேண்டியவனே! குலம் அறியாத என்னை நல்ல நிலையில் வைத்து, நம்பியிருக்கும் துரியோதனனை நான் இந்த நிலையில் எப்படிக் கைவிட முடியும்? கண்ணபிரான்



அர்ஜுனனுக்கு எல்லாவிதங்களிலும் எப்படி மன மிசைந்து, நட்புக் காரணமாக உதவி புரிகிருரே அப்படி நான் துரியோதனனுக்கு என் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அர்ப்பணம் செய்து, அவன் பக்கம் நின்று யுத்தம் செய்ய உறுதிகொண் டுள்ளேன். இந்த உறுதியை நிறைவேற்ற எனக்கு அனுமதி அருள்க!" என்று மீண்டும் அவர் பாதங் களில் தன் தலையை வைத்துக் கன்னன் வணங்கி ஞன்.

அவன் சொல்லைக் கேட்ட பீஷ்மர், தழுதழுத்த குரலில், "உன் உறுதி இதுவானல் நான் அனுமதி கொடுக்கிறேன். நீ யுத்தகளத்தில் தர்ம யுத்தம் செய்து, அர்ஜுனன் கையால் வீரசுவர்க்கம் பெற வழியைத் தேடு. உன் புகழ் இந்த உலகம் உள்ள அளவும் நிலைபெற்று நிலவுக" என்று அவனை ஆசீர் வதித்து அனுப்பினர்.

# 15. தருமரை ஓடவைத்தது

பாரதப் போர் பதினெட்டு நாள் நடந்தது. முதல் பத்து நாட்களில் துரியன் கட்சியில், பீஷ்மர் சேனைத் தலைவராக இருந்து, போர் நடத்திக் களத்தில் சோர்ந்து வீழ்ந்தார். பதினோராம் நாள் முதல் பதினைந்தாம் நாள் முடியத் துரோணர் தலைவராக இருந்து, யுத்தகளத்தில் மடிந்தார். பதினாறாம் நாள் முதல் கௌரவப் படைகளுக்குக் கன்னன் தலைவனானான்.

கன்னன், சேனாதிபதியானது கண்ட கண்ணன், பாண்டவரைப் பார்த்து, "கன்னனுடன் சரிசமானமாகச் சண்டை செய்யக் கூடியவர்கள் நம் கட்சியில் இல்லை. தன் உறுதியை இழக்காமல் அர்ஜுனன்தான் அவன் முன் நின்று சண்டை செய்ய வேண்டும்" என்றார்.

"இத்தனை நாள் யுத்தங்களையும் உன் அருளினாலேயே நாங்கள் வென்றோம். கன்னனுடைய போரையும் உன் ஆதரவாலேதான் அர்ஜுனன் வெல்ல வேண்டும்" என்று தருமர் கூறினார்.

தருமர் இவ்விதம் கூறினாலும் தம் மனத்துள், "நானே, கன்னனை ஒரு கை பார்த்துவிடுகிறேன் !" என்று எண்ணி, அவன் முன் போர்க்களத்தில் முடுகிச் சென்றார். கன்னனுக்கும் தருமனுக்கும் கடும்போர் நடந்தது. தன் தாய்க்கு வாக்களித்தபடி தருமனைக் கொல்லக் கூடாதென்று, கன்னன், பல அம்புகளைப் போட்டுத் தருமன் திக்பிரமை கொள்ளும்படி, லாகவமாகப் போர் செய்தான். கன்னனுடைய பாணங்களின் வேகத்துக்கு ஆற்றாமல் தருமர் புறங்காட்டி ஓடத் தலைப்பட்டார்.

அப்போது கன்னன் குறுக்கே சென்று, தருமரின் இரதத்தைத் தடுத்து, "தருமனே, நீ கலைகளில் வல்லவன்; சத்தியசந்தன்; மேலான இராஜசூயத்தைச் செய்தவன். தீரர்களான தம்பிகளை உடையவன். சிறந்த அறிவு படைத்தவன். இத்தகைய நீ, போரில் எதிர் நிற்காது முதுகு காட்டி ஓடுவது அழகன்று" என்று சொல்லிப் புன்னகை புரிந்தான்.

எமனுக்கும் அஞ்சாத தருமர், கன்னன் முன் நிற்க மாட்டாமல் அச்சமும் வெட்கமும் தம்மை இழுக்க, ஓட்டம் பிடித்தார். கன்னன்மீது அவருக்குத் தீராப் பகை பிறந்தது.

பதினேழாம் நாள், பாண்டவரின் படைகள் போர்க்களத்தை நாடுவதன்முன் அர்ஜுனன் தன் தமையனை தருமபுத்திரரை அடைந்து, "இன்று நான் கன்னனைக் கொன்றுவிட்ட பின்பே தங்களைப் பார்க்க வருவேன்" என்று உறுதிகூறி, வணங்கி, விடைபெற்றுச் சென்றான்.

அர்ஜுனனுடைய மொழிகளால் தருமர் ஆறுதல் உற்றார். தம்பி எப்படியும் கன்னனைக் கொன்றே திரும்புவான் என்ற உறுதி அவருக்கு இருந்தது.

# 16. நாகாஸ்திரப் பிரயோகம்

சல்லியன் தேர் செலுத்தக் கன்னன் கம்பீர மாக யுத்தகளத்தை அடைந்தான். பாண்டவர் சேனைகள் அவன்முன் நிற்க மாட்டாமல் சித றுண்டன. பாண்டவர்களின் படைத் தலைவனுகிய திஷ்டத்துய்மனுல் தன் சேனைகளை ஒன்றுதிரட்ட இயலாமையால் அவனும் புறமுதுகிட்டு ஓடினுன்.

ஓடுகிறவர்களைத் தடுத்து, "அஞ்சாதீர்கள்! வாருங்கள்!" என்று சொல்லி, அர்ஜுனன் கன் னன் எதிரே வந்து நின்ருன்.

ஒருவர் வீசின அம்பு மற்ருெருவர்மீது படாமல் இருவரும் மிகத் திறமையுடன் சிறிது நேரம் போர் புரிந்தனர்.



இனித் தாமதம் செய்யக்கூடாது. இதோ அர்ஜுனனைத் தொலைத்துவிடுகிறேன் !'' என்று சொல்லித் தன் தூணியிலிருந்து நாகாஸ்திரத்தைக் கன்னன் எடுத்தான். எடுத்த அம்புக்குப் பூசை செய்து, மந்திரத்தை உச்சரித்து, அதை வில்லில் வைத்தவன் அர்ஜுனனுடைய நெற்றியை நோக்கி, இலக்கு வைத்தான்.

"கன்னா ! இது விசேஷமான அம்பு போலும். இதற்கு நீ தனியே பூசை செய்து, மந்திர உச்சாடனத்துடன் வில்லில் வைத்திருக்கிறாய். சற்றுப் பொறு ; ஒரு விஷயம்'' என்றான் சல்லியன்.

"ஆம், சல்லியரே ! இது விசேஷமான அம்புதான். அர்ஜுனனை நிச்சயமாகக் கொல்லத்தக்க ஆற்றல் உள்ளது. அரைக் கணத்தில் அர்ஜுனன் தேரிலிருந்து உருண்டு விழுவதை நீங்கள் பார்க்கப் போகிறீர்கள் !'' என்றான் கன்னன்.

"கன்னா ! அப்படியானால் அர்ஜுனனுடைய நெற்றிக்கு அம்பைக் குறி வைக்காதே ; மார்பைப் பார்த்து அம்பு போடுவதுதான் முறை'' என்றான் சல்லியன்.

"அதைப்பற்றி உமக்குக் கவலை வேண்டாம். நான் போர்முறை தெரியாமல் வில்லேந்தி இங்கே வரவில்லை. என் குறி ஒரு நாளும் பிழையாது !'' என்றான் கன்னன்.

"என் வார்த்தைகளைக் கேளப்பா !'' என்று வேண்டினான் சல்லியன்.

"நீங்கள் சாரதியாக இருங்கள். வீண்

யோசனைகளைக் கூறவேண்டாம். முடிவை நோக்குங்கள்" என்றான் கன்னன்.

பரசுராமரின் சாபம் முன் நின்றது. சல்லியன் தன் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு, மௌனமாக இருந்தான். நடக்கப் போவதை அவன், கூர்ந்து கவனித்து வரலானான்.

அரவக் கணை அர்ஜுனன் தலையை நோக்கிச் சீறி வந்தது. சமயம் பார்த்துக் கிருஷ்ணன், தன் காற்பெருவிரலினால் அர்ஜுனன் இருந்த இரதத்தை அழுத்தினார். இரத்தப் பெருக்கினால் சேருகியிருந்த தரையில் அது ஓரடி ஆழம் இறங்கியது. இதனால் தலைக்குக் குறிவைத்த அம்பு, அர்ஜுனனது முடியை அடித்துக்கொண்டு போயிற்று. கிருஷ்ணன் செய்த உபாயத்தால் அர்ஜுனன் உயிர் பிழைத்தான். 'தலைக்கு வந்தது தலைப்பாவோடு போயிற்று' என்ற பழமொழி அன்று தொட்டு வழங்குகிறது.

நாகாஸ்திரம் பிழைத்துப் போனதற்குக் காரணம் தன் குருவின் சாபமே என்று கன்னன் கருதினான். முடியை அடித்துப்போன அம்பு கன்னனிடம் வந்தது. தன்னை மறுமுறை ஏவினால் அர்ஜுனனைத் தப்பாமல் கொல்வதாக அது கூறிற்று. கன்னன் அதற்கு இசையாமல் அதனை எறிந்துவிட்டான்.

இத்தனையையும் தேரிலிருந்து பார்த்துக்கொண்டே இருந்த சல்லியன், "இனி உனக்கு நான் தேர் செலுத்தமாட்டேன். கண்ணனைப்போல் ஒரு சாரதி வேண்டும்!' என்றான் துரியோதனன்.

நான் இசைந்தேன். கண்ணன் கூறுகிறபடி எல்லாம் அர்ஜுனன் நடக்கிறன். நீயோ என் சொற்களில் ஒன்றையும் ஏற்றுக்கொள்ளாமல் அவமதிக்கிருய். நாகாஸ்திரத்தை நான் சொன்னபடி அர்ஜுனனுடைய மார்புக்குக் குறி வைக்காமற் போனது உன் குற்றம். இனி இந்த வேலையைச் செய்யேன்!" என்று கூறித் தேரிலிருந்து குதித்து, அப்பாற் சென்றுன்.

"சுத்தவீரனுக்குச் சாரதி அவசியம் இல்லை. பாகனின்றி நானே தேரைச் செலுத்திக்கொண்டு பகைவனுடன் போராட முடியும்" என்று சொல்லிக் கன்னன் தனியாகவே அமரைத் தொடங்கினுன்.

இருவர் ஒன்று சேர்ந்து, ஒரு வேலையைச் செய்யும்போது அவர்களுள் தகராறு ஏற்பட்டுக்கொண்டிருக்குமானுல் அதைப் பார்ப்பவர்கள், 'இது ஏது சல்ய சாரத்யமாக இருக்கிறதே!' என்று சொல்லுவார்கள். இந்த வழக்குக் கன்னனுடைய மேலே கண்ட வரலாற்றுக் காலம் முதல் நம் நாட்டில் இருக்கிறது.

# 17. அண்ணன் தம்பி மனஸ்தாபம்

இரத்தச் சேற்றில் அழுந்திய தேரைக் கிருஷ்ண பகவான் செய்த முன் ஏற்பாட்டின்படி ஆஞ்சநேயர் அங்கே வந்து, சேற்றிலிருந்து தூக்கி வைத்துச் சென்றார். பிறகு கிருஷ்ணர், "அர்ஜுனா! பெரிய ஆபத்து ஒன்றுக்குத் தப்பினாய்; இனிமேல் உனக்கு அரியது ஒன்றும் இல்லை; முனைந்து போர் செய்" என்று அவனைத் தூண்டினார்.

பிறகு கன்னனும் அர்ஜுனனும் மறுபடியும் போரைத் தொடங்கினார்கள். பரசுராமருடைய சாபம் காரணமாகக் கன்னன் சோர்வடைந்து சிரம பரிகாரம் செய்துகொள்ளச் சிறிது நேரம் தேரில் சாய்ந்தான். அப்பொழுது தருமதேவதை கன்ன னுக்கு உதவி செய்ய ஓர் உபாயம் தேடியது.

தேரில் சாய்ந்திருந்த கன்னன், அர்ஜுனன் கண்களுக்குத் தருமரைப்போல் காட்சியளித்தான். உடனே விஜயன் தன் வில்லைக் கைசோர விட்டு, "கிருஷ்ணா, உன் சூழ்ச்சி அழகாக இருக்கிறது! அன்று என் மகன் அபிமன்யுவைக் கொல்ல ஒரு சூழ்ச்சி செய்தாய். என் தமையனைப் பொய் சொல்லச் செய்து, ஒரு சூழ்ச்சியால் துரோணரைக் கொல்வித்தாய். இப்பொழுது என் கைகளால் என் தமையன் தருமரையே கொல்லச் சூழ்ந்திருக்கிறாய். என் எதிரில் இருப்பவன் கன்னன் அல்லன்; தருமர் அல்லவா இருக்கிறார்! சகோதர வாஞ்சை இத யத்தைப் பிளக்க, எனக்கு வருத்தத்தைத் தரும்படி யான இந்தச் செயலைச் செய்யத் தூண்டாதே.

நான் இனி வில்லைத் தொடேன்!" என்று சொன்ஞன். கிருஷ்ணரைப் பலவாறு பழிக்கலாஞன்.

"அர்ஜுஞ, உன் தமையன் இன்று யுத்தகளத்துக்கே வரவில்லையே! பாசறையில்தானே இருக்கிருன். உன் எதிரில் தோன்றுகிறவன் கன்னனே. உன் கண்களில்தான் பிழை. ஆள் மாருட்டம் இல்லை. இதுவே தருணம். விரைந்து அம்பைச் செலுத்து" என்று கிருஷ்ணர் அவனைத் தூண்டிஞர்.

கண்ணஞரின் சொற்களில் அர்ஜுனனுக்கு நம்பிக்கை போய்விட்டது. போரிட அவன் மறுத்து விட்டான். ஆகையால் கண்ணபிரான் தேரை நேரே பாசறைக்குச் செலுத்திஞன். அர்ஜுனன், தருமனைப் பார்த்தால் யுத்த களத்தில் இருப்பவன் தருமனல்லன் என்பதை உணர்வான் என்று அவர் எண்ணிஞர். அர்ஜுனன் தருமரிடம் காலையில் சொல்லிவந்த உறுதிமொழியை அவர் அறியார்.

அர்ஜுனன், கன்னனைக் கொன்ற பிறகே தம்மை வந்து காண்பதாகச் சபதம் செய்துவிட்டுச் சென்ருன். ஆதலால் பகைவனைக் கொன்றுவிட்டுத் தான் வருகிருன் என்று அவனை எதிர்கொள்ளத் தருமர் வெளியே வந்தார்.

அர்ஜுனன், கன்னனைக் கொல்லாமல் வருகிருன் என்பதை அறிந்ததும் கோபங்கொண்டு, அவர், "அர்ஜுஞ! நீ ஒரு வீரஞ! உன் காண்டீபம் ஒரு வில்லா!" என்று பழித்தார்.

தன் வில்லைப் பழிக்கிறவனைக் கொல்வதாக அர்ஜுனன் சபதம் செய்திருந்தான். தருமர் தன்

வில்லாகிய காண்டீபத்தைப் பழிக்கவே, "அண்ணனானால் என்ன? தம்பியானால் என்ன? வில்லைப் பழித்ததனால் இதோ இவனைக் கொன்றுவிடுகிறேன்" என்று கோபத்தால் பல வசை மொழிகளை அவன் கொட்டினான்.

கண்ணன், அவனைத் தடுத்து, "அர்ஜுனா! உன் தமையனைப் பல வசைமொழிகள் சொல்லி அவமதித்தது அவனைக் கொன்றதற்குச் சமம். உன் சபதம் வீண் போகவில்லை. கோபத்தை அடக்கிக் கொள்" என்று அவனைச் சாந்தப்படுத்தினார்.

அர்ஜுனன், தன்னைச் சினத்தினால் பலவாறு திட்டிப் பேசியது கண்ட தருமர், "எனக்கு இராஜ்ஜியமும் வேண்டாம்; ஒன்றும் வேண்டாம். இவர்களுக்காகத்தானே நான் போராடுகிறேன். இவர்களே என்னை மதிக்கவில்லை என்றால் இங்கே எனக்கு வேலை இல்லை. இப்பொழுதே துறவியாகி விடுகிறேன்!" என்று எழுந்தார்.

கண்ணன் தருமரை நல்ல சொற்களால் சாந்தப் படுத்திவிட்டு, மீண்டும் அர்ஜுனனுடன் போர்க்களத்தை அடைந்தார்.

தமையனுகக் காட்சி தருகிறவர் தருமர் அல்லர் கன்னனே என்பது அர்ஜுனனுக்குத் தெளிவாகவே அவன் மேலும் போர் செய்யத் துணிந்தான்.

# 18. கண்ணபிரானுக்குத் தானம்

சோர்வு தீர்ந்து, கன்னன் மறுபடியும் அர்ஜுன னுடன் போர் செய்தான். என்ருலும் பரசுராமரின் சாபம் குறுக்கிடவே மறுபடியும் அவன் சோர் வுற்றுத் தேர்மேல் சாய்ந்தவண்ணம் கிடந்தான். தர்மதேவதை இப்பொழுதும் கன்னனுக்கு உதவ முன்வந்தது.

கன்னன் செய்த தருமங்கள் எல்லாம் பெரிய பூதமாக உருவெடுத்துக் கன்னன் தேர்மேல் அமர்ந் தன. அர்ஜுனன் விடும் பாணங்களை எல்லாம் அந்தப் பூதம் வாய் திறந்து விழுங்கிவிட்டது.

தன் பாணங்கள் எப்படி வீணுகின்றன என் பது விஜயனுக்குப் புலப்படவில்லை. அவன் கைகள் சோர்ந்தன. புட்டிலிலும் அம்புகள் குறைந்தன. மனம் உறுதியை இழந்தது.

சிறிது நேரத்தில் அவன், கண்ணனிடம், "இனி என்னுல் கன்னனுடன் போராட முடியாது! எனக்கு இது சாத்தியமில்லை. எத்தகைய தெய் விகப் படையும் கன்னனை ஊறு செய்யக் காணேனே!" என்று சொல்லி, வில்லைக் கை நழுவ விட்டுத் தேரில் சோர்ந்து விழுந்தான்.

கண்ணபிரான் அவனைச் சற்றுப் பொறுத் திருக்கச் சொல்லிவிட்டுத் தேரிலிருந்து இறங்கினுர். பிறகு அவர் ஓர் அந்தணனைப் போல் வேடந் தாங்கிக் கன்னனிடம் சென்ருர்.

பெரியவர் ஒருவர் தானம் பெறுவதற்குத் தன் பால் வந்திருப்பதைக் கன்னன் அறிந்துகொண்

டான். சாய்ந்திருந்தபடியே அவரை வணங்கினுன். அவனுல் எழுந்து மரியாதை செய்ய இயலவில்லே. உடலெல்லாம் அம்புகள் பாய்ந்து, கொப்பளித்திருந்தது.

"புனிதமான பெரியவரே! நான் பதவியிலிருந்து, யார் எதனேக் கேட்பினும் கொடுத்து வந்த அந்தப் பக்குவ காலத்தில் தாங்கள் வந்தீர் அல்லீர். பகைவருடைய அம்புகளால் மொத்துண்டு, உயிர் இருக்கிறதோ போய்விட்டதோ என்பதுகூடத் தெரியாமல் தேரில் நான் சாய்ந்துகிடக்கும் இந்த நிலேயில் வந்திருக்கிறீர். உமக்கு வேண்டியதைக் கேளுங்கள்" என்று அவரிடம் சொன்னுன் கன்னன்.



அந்தணர் வடிவிலிருந்த கண்ணபிரான் கன்ன னைப் பார்த்து, "கொடைவீரனே! நீ இந்தப் பிறவி யில் இதுகாறும் செய்திருக்கும் தருமத்தை எல்லாம் எனக்கு வழங்குக" என்று கையை நீட்டினர்.

கொடுத்தற்கு இயன்ற ஒரு பொருளையே அந்த ணர் கேட்கிருர் என்று மகிழ்ச்சி கொண்ட கன்னன் தன் தருமத்தை எல்லாம் அவருக்குத் தானம் செய் தான். அப்போது தன் உடலிலிருந்து பெருகிய செந் நீரால் தானத்தைத் தாரை வார்த்துக் கொடுத்தான்.

தானத்தை ஏற்றுக்கொண்ட திருமால், கன்ன னுக்குத் தன் உண்மை உருவைக் காட்டியதோடு சங்கு, சக்கரம், வாள், வில், கதை என்ற பஞ்ச ஆயுதங்களோடும் திருமாலாகவும் தரிசனம் கொடுத்தார்.

கண்ணபிரானே திருமால் என்பதைக் கன்னன் உணர்ந்தான். சாகும் நிலையில் திருமாலைத் தரி சித்தது பெரும் பாக்கியம் என்று எண்ணினன் அவன். இங்ஙனம் எண்ணியவன் விஷ்ணு மூர்த்தியாகிய அந்தக் கடவுளை நாவாறத் துதித்துக் கையால் வணங்கி, மனத்தால் வாழ்த்தினன்.

பிறகு திருமால் கன்னனை நோக்கி, "அப்பனே! உனக்கு விருப்பமான ஒரு வரத்தைக் கேட்டுப் பெற்றுக்கொள்" என்றார்.

அதனைக் கேட்ட கன்னன், "நான் பெரும் பாக்கியசாலி, உயர்குலப் பிறப்புடையேன். சிறந்த தம்பிமார்களைப் பெற்றுள்ளேன். என் பொருளை எல்லாம் நல்ல வழியிலே அறம் செய்தேன். இந்த

உடலை என் ஆருயிர் நண்பன் பொருட்டு யுத்த களத்துக்கு அர்ப்பணம் செய்து, செஞ்சோற்றுக் கடனைத் தீர்த்துக்கொண்டேன். இவற்றைவிட இகத்தில் எனக்கு வேண்டுவது ஒன்றும் இல்லை. இனி எனக்குப் பிறவி உண்டாயின் அந்தப் பிறவியில் இல்லை என்ற வார்த்தையை நான் சொல்லாத மனத்தை எனக்குத் தந்தருள்க!'' என்று திருமாலை வேண்டினான் கன்னன்.

திருமால், அவன் விருப்பப்படியே மறு பிறவிகளில் அவனுக்குத் தரும சிந்தனையையும் அதற்கேற்ற செல்வத்தையும் அவன் பெறும்படி வரம் அருளி, அவ்விடம் விட்டு அகன்றார்.

# 19. முடிவு

திருமாலைத் தரிசித்த கண்களால் இனி உலகப் பொருள்களைக் காண்பதில்லை என்ற வைராக்கியத் துடன் கன்னன், கண்களை இறுக மூடிக்கொண்டு, தியானத்தில் அமர்ந்திருந்தான்.

கன்னனிடம் அவன் செய்த தருமத்தை எல் லாம் தானம்பெற்று வந்த கண்ணன், பழையபடி அர்ஜுனன் தேருக்கு வந்து சாரதியானார். பிறகு அவர், அர்ஜுனனை உற்சாகப்படுத்திக் கன்னன் மீது அம்புகளை ஏவச் செய்தார்.

தரும தேவதையின் காவல் இல்லாததால் கன் னனை அர்ஜுனன் எளிதில் கொன்று வீழ்த்தினான்.

ஆகாயத்திலிருந்து ஒரு குரல் எல்லோரும் கேட்கும்படி, 'குருகுல சிரேஷ்டனான கன்னன் யுத் தகளத்தில் உயிர் நீத்து, வீரசுவர்க்கமடைந்தான்!' என்று எழுந்தது. அந்தக் குரலைத் தருமரும் கேட் டார். தூரியனும் ஓரிடத்தில் குற்றுயிருடன் அம்புப் படுக்கையில் கிடந்த பீஷ்மரும் கேட்டனர்; மற்ற வரும் கேட்டனர். 'கன்னனுக்கும் குருகுலத்துக் கும் என்ன சம்பந்தம்! அவன் தேர்ப்பாகன் மகனா யிற்றே!' என்று பலர் எண்ணினர்.

அச்சமயம் குந்திதேவி அழுதுகொண்டு, மார் பில் அடித்துக்கொண்டு, ஓடோடி யுத்தகளத் துக்கு வந்தாள். வந்தவள் கன்னன் உடலை எடுத்து மடிமீது வைத்துக் கொண்டு, காயங்களைத் தடவிக்கொடுத்து வாய்விட்டு அழுதாள்.

எல்லோருக்கும் அவளது செய்கை வியப்பைத் தந்தது. தருமர், பீமன் முதலிய ஐவரும் தம் தாயை நெருங்கி, அவள் கன்னனை மடிமீது வைத்துக் கொண்டு அழுவதன் காரணத்தைக்கேட்டார்கள்.

குந்தி, தன் தநயர்களை நோக்கி, ஆதியோடு அந்தமாக யாவற்றையும் சொல்லி, கன்னன் அவர்களுடைய அண்ணன் என்பதை நிரூபித்தாள்.

அதனைக் கேட்ட பாண்டவர் ஐவரும் பதைத்து வீழ்ந்து அழுதனர். அர்ஜுனன், "நான் மிகவும் பாவியானேன்! சகோதரனைக் கொன்ற பாதகனுனேன். இத்தனையும் கண்ணனுடைய சூழ்ச்சியே!" என்று கதறி அழுதான்.

கன்னன், தங்கள் உடன் பிறந்தவன் என்பதை இரகசியமாக வைத்திருந்ததற்காகப் பாண்டவர்கள் தாயைப் பழித்தார்கள்.

"கன்னனை, இழி குலத்தவன் என்று நாம் பல முறை பழித்தோமே!" என்று பீஷ்மரும் வருந்தினுர். துரியோதனன், தன் அரிய நண்பனை இழந்ததற்காக வருந்தி வருந்தித் துரும்பானுன்.

சூரியன், தன் மகன் இறந்த வருத்தம் தாங்காமல் மேற்குக் கடலில் மறைந்தான். இரு கட்சியாரும் அன்று யுத்தத்தை அத்துடன் நிறுத்திவிட்டு இறந்துபோன கன்னனுக்குச் செய்யவேண்டிய மரணச் சடங்குகளை மரியாதையுடன் நடத்தினுர்கள். தருமரே கன்னனுடைய அந்திமகாலச் சடங்குகளை நடத்தினுர். எல்லோரும் அவனை, 'கொடைவீரன், உத்தம நண்பன், புருஷ சிங்கம்!" என்று சொல்லி வாழ்த்தினுர்கள்.

முற்றும்

...AI UNIVERSITY